டால்டா
எனக்கு
நல்லது




**டால்டா**

பிராண்ட்

**வனஸ்பதி**

அது சமையல் செய்வதற்கு சிறந்ததாய் இருப்பதோடு போஷாக்கையும் தரும்!

HVM. 204-50 TM




# கல்கி

## பொருளடக்கம்




### ஆகஸ்டு 26, 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

## இடத்தைக் கொடுத்தால்......!




சூயெஸ் கால்வாயில் சர்வதேச நிர்வாகத்துக்கு இடமளிப்பது எகிப்தின் சொத்துரிமையைப் பறிப்பதாகும்.



மலர் 16 | இதழ் 4

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி | ஆவணி 11

# குஜராத் குழப்பம்

குஜராத்தில் நிகழ்ந்துள்ள விபரீதமான சம்பவங்கள் பாரத நாட்டிலுள்ள தேசபக்தர்கள் அனைவருக்கும் வியப்பை உண்டாக்கும். வியப்புக்கு மேல் மிகுந்த வருத்தத்தையும் உண்டாக்கும் என்பது நிச்சயம்.

மகாராஷ்டிரர்கள்தான் பிடிவாதம் காட்டினார்கள் என்று எண்ணினோம். ஆனால், குஜராத் மக்கள் பிடிவாதத்தில் அதற்கும் ஒரு படி அதிகமாகவே சென்று விட்டார்கள். அவர்கள் என்ன காரணத்தினாலோ தங்களுடைய சுபாவத்துக்கு மாறாக நடந்து கொண்டு வருகிறார்கள்.

குஜராத்தியர்களுக்குப் பம்பாய் நகரத்தில் ஏராளமாகச் சொத்துக்கள் இருக்கின்றன. அவர்களுடைய வியாபாரமும் அங்கு பிரும்மாண்டமாக வியாபித்திருக்கிறது.

எனவே, பம்பாய் நகரம் மகாராஷ்டிரர் ஆட்சிக்குள் அடங்கி விட்டால் தங்களுக்குக் கஷ்டம் ஏற்படும் என்று குஜராத்தியர்கள் பயந்தார்கள். புது ஏற்பாட்டின்படி செய்யப்பட்ட பாஷாவாரிப் பிரிவினையில் பல சிக்கல்கள் ஏற்பட்டன; அநியாயங்களும் ஏற்பட்டன. அவற்றில் ஒன்று பம்பாய் நகரத்தைப் பற்றிய சிக்கல்.

மொழிவாரிக் கொள்கைப்படி பம்பாய் நகரம் மகாராஷ்டிர ராஜ்யத்தில்தான் சேரவேண்டும். எனினும் அவ்விதம் செய்வதால் பல இடையூறுகள் உண்டாகும் என்று எண்ணி, பம்பாய் நகரத்தை மத்திய அரசாங்க நிர்வாகத்தின் கீழ் கொண்டு வருவது என்று தீர்மானிக்கப்பட்டது.

இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றுவதற்குப் பல இடையூறுகள் உண்டாயின.

"நியாயப்படி எங்களுக்குச் சேரவேண்டியதை எங்களுககுத் தர ஏன் மறுக்கிறீர்கள்?" என்று மகாராஷ்டிரர்கள் கேட்டு, போராட்டமும் கலகமும் குழப்பமும் செய்ய ஆரம்பித்தார்கள்.

"நான்கு ஐந்து ஆண்டுகள்தான் பம்பாய் நகரம் மத்திய ஆட்சிக்கு உட்பட்டிருக்கும்; பிறகு உங்களுக்கே ஜனநாயக முறைப்படி கொடுத்து விடுவோம்" என்று நேருஜி சமாதானம் சொன்னார்.

பம்பாய் நகரம் என்றென்றைக்கும் மத்திய ஆட்சியின் கீழ் இருப்பதாக முடிவு செய்தால் குஜராத்தியருக்குத் திருப்தியாக இருந்திருக்கும்.

குஜராத்துக்குள் பம்பாய் நகரத்தை அமைத்து விடுவது நியாய விரோதமாகும். ஆனபடியால் இருவருக்கும் இல்லாமல் மத்திய ஆட்சியில் இருந்தால் பம்பாய் நகரத்திலுள்ள குஜராத்தியர் க்ஷேமமாக இருப்பார்கள் என்பது குஜராத்தி மக்களின் கருத்து.

ஆனால் ஒரு நகரத்தை இவ்விதம் பிரித்து விடுவது முறையல்ல.

இதை உணர்ந்த பாரத நாட்டு மக்கட் சபையின் பிரதிநிதிகள் தங்களில் மிகப் பெரும்பாலோருடைய ஆதரவு பெற்று ஒரு முடிவுக்கு வந்தார்கள், அதாவது குஜராத்தும் மகாராஷ்டிரமும் ஒரு ராஜ்யமாக இருக்க வேண்டும் என்று. அந்த ராஜ்யத்தில் பம்பாய் நகரம் முன்போலவே தலைநகரமாக இருந்து வரவேண்டும்.

அதன் பலனாக இரு சாராருடைய பெருமைக்கும் யோக க்ஷேமத்துக்கும் எவ்விதக் குறைவும் ஏற்படாது என்று எண்ணியே மேற்படி முடிவைப் பாரத நாடு முழுதும் மிக உற்சாகமாக வரவேற்றிருக்கிறது.

இப்போது எவருடைய துராலோசனைக்கோ உட்பட்டுக் குஜராத் மக்கள் மதியிழந்து குழப்பமும் கலகமும் செய்து வருகிறார்கள்.

மகா குஜராத் ராஜ்யம் தனி ராஜ்யமாக நிர்மாணிக்கப்பட்டு அதில் தாங்கள் சுதந்திர யதேச்சாதிகாரம் நடத்தலாம் என்று அவர்கள் கருதினார்கள். மகாராஷ்டிர

ஜனங்களுடைய தொல்லையில்லாமல் தங்களுடைய நிர்வாகத்தை நடத்திக் கொண்டு போகலாம் என்றும் ஆசைப்பட்டார்கள்.

அத்தகைய ஆசை நிறைவேறாததாலேயே சிலர் ஏமாற்றமும் கோபமும் அடைந்து அக்கிரமமான செயல்களில் இறங்கினார்கள்.

மராட்டியருடைய தொல்லை யில்லாமல் குஜராத் ஒரு தனி ராஜ்யமாகி விட்டால், சில விஷயங்களில் குஜராத்தியர்கள் சுகமாகவே இருக்கலாம்.

ஆனால் அப்போது பம்பாய் நகரத்திலுள்ள குஜராத்திய பிரபுக்களும் பாமரர்களும் தங்கள் நிலைமையைக் குறித்து வருந்தநேரிடும். "நீங்கள் விரும்பாத மகாராஷ்டிரர்களின் தொல்லைக்கு இரையாகும்படி எங்களைத் தள்ளி விட்டு நீங்கள் சுகமாகப் பிரிந்து போய் விட்டீர்களே!" என்று பம்பாய் குஜராத்திகள் எண்ணி வருந்த மாட்டார்களா?

'பம்பாய் நகரத்திலுள்ள குஜராத்தியரின் கதி என்னவாயினும் சரி, நமக்குத் தனி ராஜ்யம் வேண்டும்' என்று மற்றக் குஜராத்தியர்கள் பிடிவாதம் செய்வதில் என்ன நியாயம் இருக்கிறது? அத்தகைய பிடிவாதம் புத்திசாலித்தனம் ஆகாது.

பம்பாய் நகரம் ஒரு நாளும் குஜராத் ராஜ்யத்தில் ஒரு பாகமாக ஆக முடியாது. அது இன்றோ அல்லது அடுத்த ஆண்டிலோ மகாராஷ்டிர ராஜ்யத்துடன் சேர்ந்துதான் தீர வேண்டும். ஆகையால் எல்லா மகாராஷ்டிரப் பிரதேசங்களும் பம்பாய் நகரமும் குஜராத் ராஜ்யத்தோடு ஒன்றாகி ஒரே ராஜ்யமாக நிர்வாகம் நடைபெறுவதே குஜராத் மக்களுடைய க்ஷேமத்துக்கு முற்றிலும் பொருத்தமாகும்.

ராஜ்ய நிர்வாகத்தில் நியாயம் பாதுகாக்கப்பட வேண்டியது அத்தியாவசியமாகும். பெரும்பாலோராக இருந்தாலும் சரி, சிறுபான்மையோராக இருந்தாலும் சரி, நியாயத்தைப் பாதுகாப்பது எல்லாருடைய உரிமையுமாகும்; பாதுகாப்பதும் எளிது. அவ்விஷயத்தில் பயத்துக்குக் காரணமே இல்லை. மொழிப்பிரச்னை இருக்கும் வரையில்தான் இந்த விரோதங்களும் குழப்பங்களும் தாண்டவமாடும். மொழிப் பிரச்னையை விலக்கி விட்டு, குஜராத்-மகாராஷ்டிர ஐக்கியராஜ்யம் ஏற்பட்டபின் இருவருக்குள் என்ன விரோதம் இருக்க முடியும்? ஒருவருக்கு ஒருவர் எப்படி அக்கிரமம் செய்ய முடியும்? செய்தால் மத்திய சர்க்கார் ஒருநாளும் கைகட்டிப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

ஒரு நகரம் நமக்குச் சேர வேண்டும் என்று போராடுவதைக் காட்டிலும் அந்த நகரமும் அத்துடன் மகாராஷ்டிர தேசம் முழுவதுமே தம்முடைய ஆட்சிக்கும் பாதுகாப்புக்கும் அடங்கி விட்டால் மகத்தான லாபமே யொழிய நஷ்டமில்லை என்பதைக் குஜராத் பிரமுகர்கள் எளிதில் உணரலாம்.

குஜராத் பிரமுகர்கள் பயத்தை ஒழித்து மக்களுக்கு விஷயத்தை எடுத்துக் காட்டிக் குழப்பங்களை அடக்கி மறுபடியும் சாந்த நிலை தோற்றுவிப்பார்கள் என்று நம்புகிறோம்.

'மக்கள் சபை தீர்மானத்திற்கும் ஜவாஹர்லால்ஜி விருப்பத்துக்கும் ஒப்ப, குஜராத்து மக்களின் சம்மதத்தையும் ஆதரவையும் நன்னடத்தையையும் திரட்டித் தர என்னால் முடியாமற் போனால் உயிரை வைத்திருந்து என்ன பயன்?' என்று முரார்ஜி தேசாய் உண்ணாவிரதம் பூண்டிருக்கிறார். இதில் என்ன வியப்பு? பண்பட்ட மனிதன் உயிருடன் இருப்பதற்கு ஒரு ஆசையோ பக்தியோ சங்கற்பமோ தூண்ட வேண்டும். தன் உயிரை விட அதிகமாக எண்ணிய தன்னுடைய சமூகம் தன்னை வெறுத்தபின் உயிர் வாழ்க்கை என்னத்திற்கு என்று தானே ஒருவனுக்குத் தோன்றும்? ஆண்டவன் அருளால் மகாராஷ்டிர மக்களும் குஜராத்து மக்களும் முன்னை விட உறுதியான ஒற்றுமையை அடைந்து க்ஷேமமாகவும் சந்தோஷமாகவும் இருப்பதற்கு இந்தச் சம்பவங்களும் இந்த விரதமும் மங்களமாக முடிய வேண்டும்.

லோகமான்ய திலகர், மகாத்மா காந்தி, பாரதநாட்டு மகரிஷி தாதாபாய் நௌரோஜி இவர்களுடைய ஆன்மாக்களுக்குச் சாந்தி உண்டாகும்படி செய்வோமாக.

— சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

# கூக்குரல் எட்டவில்லை

கைத்தறிகளை இயந்திரத் தறிகளாக மாற்றி விட இந்திய சர்க்கார் வகுத்துள்ள திட்டத்தைச் சென்னை சர்க்கார் ஆதரிப்பதாக, சென்னைச் சட்டசபையில் கைத்தொழில் மந்திரி அறிவித்திருக்கிறார். எனவே, கைத்தறி நெசவாளர்களின் கூக்குரல் சர்க்கார் செவிகளில் விழவில்லை என்பது நிச்சயமாகிறது. சில தினங்களுக்கு முன் இந்திய சர்க்கார் உதவி இட்ட மந்திரி ஸ்ரீ மிஸ்ரா சேலத்துக்கு விஜயம் செய்தபோது, இயந்திரத் தறிகள் கைத்தறிகளை ஒழித்துவிடும் என்பதை நெசவாளர் சங்கத்தினர் பல புள்ளி விவர ஆதாரங்களுடன், எடுத்துக் காட்டியிருந்தனர். சென்னை ராஜ்யத்தைச் சேர்ந்த மற்றும் பல இடங்களில் நடந்துள்ள நெசவாளர் கூட்டங்களிலும், விசைத் தறிகள் கைத்தறிகளை ஒழிக்கும் விஷத்தறிகள் ஆகும் என்று கண்டித்திருக்கிறார்கள். இயந்திரத் தறிகளைப் பெருக்குவதால், கைத்தறி நெசவாளர்களிடையே வேலையில்லாத் திண்டாட்டத்தைப் பெருக்குவதாகும். இந்தியாவின் பழம்பெரும் சுதந்திரப் போர் வீரரான தாதாபாய் நௌரோஜியின் "கிளர்ச்சி! கிளர்ச்சி!! மனம் தளராத கிளர்ச்சி!" என்னும் மணி வாக்கை ராஜாஜி ஞாபகப்படுத்தி, கிளர்ச்சியின் மூலம் நியாயத்தைப் பெற வழி காட்டியிருக்கிறார். ஆந்திர ராஜ்யத்தைச் சேர்ந்த நானூறுக்கு மேற்பட்ட கைத்தறி நெசவாளர் கூட்டுறவு ஸ்தாபனங்கள் இயந்திரத் தறி விஸ்தரிப்புத் திட்டத்தை

## ஒரே கூண்டுக்குள் சிங்கமும் ஆடும் வாழ முடியுமா?



கைத்தறிகளை விசைத்தறிகளாக மாற்றுவது சிங்கத்தையும் ஆட்டையும் ஒரே கூண்டுக்குள் அடைப்பதாகும்.

அமுலுக்குக் கொண்டுவர வேண்டாம் என்று இந்திய சர்க்காருக்கும், ராஜ்ய சர்க்காருக்கும் தந்தி மேல் தந்தி கொடுத்துக் கிளர்ச்சி செய்து வருகின்றன. அவற்றைப் பின்பற்றிச் சென்னை ராஜ்யத்தில் உள்ள நெசவாளர் சங்கங்களும் ஸ்தாபனங்களும் விசைத் தறிகளால் தங்களுக்கு ஏற்படக்கூடிய கஷ்டங்களை முறையிட்டுக் கிளர்ச்சி செய்வதைத் தவிர வேறுவழி என்ன இருக்கிறது? நூல் பஞ்சம், மில்களின் போட்டி இவை காரணமாக ஏற்கனவே நசிக்கும் தறுவாயில் இருந்த கைத்தறி நெசவாளர்கள் மீண்டும் தலைதூக்க முற்பட்டனர். புத்துயிர் பெற்ற அவர்களை மறுபடியும் இயந்திர பூதம் பயமுறுத்தத் தொடங்கியிருக்கிறது. அந்தப் பூதத்துக்குச் சர்க்கார் ஆக்கமளிக்க முற்பட்டிருப்பதுதான் விந்தையாக இருக்கிறது. இதன் விளைவாகச் சர்க்கார் ஒரு பயங்கரமான புதிய பிரச்னையைச் சிருஷ்டிப்பதாக முடியும்; — அதிலும் தேர்தல் காலத்தில்!

# சூயெஸ் பிரச்னையைத் தீர்க்க வழி

சூயெஸ் பிரச்னை பற்றி ஆரம்பத்தில் சீறி எழுந்த வல்லரசுகளின் தொனி நாளுக்கு நாள் தணிந்து வருகிறது. வல்லரசுகளின் யுத்த முஸ்தீபு நடவடிக்கைகளின் வேகமும் குறைந்து வருகிறது. உலகமெங்கும் நியாய புத்தி படைத்த நாடுகள் எகிப்துக்கு ஆதரவளிக்கத் தொடங்கியிருக்கின்றன. சூயெஸ் பிரச்னைக்காகப் போரில் இறங்குவது நாசகரமான காரியமாக முடியும் என்ற உண்மையைப் பெரும்பாலான நாடுகளும் உணர்ந்துள்ளன.

சூயெஸ் கால்வாய்ப் பிரச்னையைச் சமாதானமாகத் தீர்க்கும் விஷயத்தில் எல்லா நாடுகளும் ஒத்துழைக்க வேண்டும்; அப்படியானால்தான், கோரமான உலக யுத்தப் பிரளயத்தைத் தவிர்க்க முடியும் என்று நேருஜி எச்சரித்துள்ளார்.

சூயெஸ் கால்வாய் கம்பெனியை எகிப்து தன் உடைமையாக்கிக் கொள்வதில் ஒழுங்கான முறையைக் கையாளவில்லை என்று பிரிட்டன் முதலிய வல்லரசுகள் ஓலமிடுகின்றன அல்லவா? அந்தக் கூற்றுக்கு ராஜாஜி அவர்கள் தகுந்த பதில் அளித்துள்ளார். சென்னையில் நடந்த பொதுக்கூட்ட மொன்றில் ராஜாஜி பேசியபோது, சூயெஸ் கால்வாய் கம்பெனியை எகிப்து தேசிய உடைமையாக்கிக் கொண்டதில் தவறு எதுவுமில்லை என்பதைத் தகுந்த ஆதாரங்களுடன் மீண்டும் தெளிவாக எடுத்துக் காட்டினார். ''அணுகுண்டு

ஆயுதங்களைக் குவித்து வரும் நாடுகள், உலக மக்களின் கண்டனத்தைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் தண்ணீரையும் காற்றையும் விஷமாக்கி மானிட வர்க்கத்துக்கே பேரபாயத்தை விளைவித்து வருகின்றன. இவ்வாறு சர்வதேச நீதிக்கும் சட்டத்துக்கும் ஒழுங்குக்கும் முற்றிலும் விரோதமான நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ள வல்லரசுகள், எகிப்து இந்த வாய்க்கால் விஷயத்தில் ஒழுங்கான முறையைக் கைக்கொள்ளவில்லை என்று கூறுவது விந்தையிலும் விந்தையாகும்'' என்று ராஜாஜி குறிப்பிட்டுள்ளார்.

யுத்த பயம் வேண்டியதில்லை. மிரட்டலுக்கு இசைந்து விட்டு நியாயத்தைக் கைவிடாமல் ஆசிய ராஜ்யங்களாவது எகிப்து உரிமையைப் பாதுகாக்க முயல வேண்டும்.

# தலைவர்கள் எச்சரிக்கை

பாரத நாட்டிலும் பாரத மக்கள் வசிக்கும் எட்டுத் திசைகளிலும் பத்தாவது சுதந்திர விழா வெகு விமரிசையாகவும் குதூகலமாகவும் கொண்டாடப்பட்ட செய்தி கேட்டு மகிழ்ச்சி அடையாதவர்கள் இருக்க முடியாது. தமிழ்ப் பெருமக்கள் அவ்வைபவத்தை மிகச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். பாரதத்தின் தவப் புதல்வரும் இந்தியக் குடியரசின் ஜனாதிபதியுமான பாபு ராஜேந்திரப் பிரசாத் நமது தலைநகரில் நடந்த விழாவில் கலந்து கொண்டு அதைச் சிறப்பித்ததே மக்களின் மட்டற்ற மகிழ்ச்சிக்குக் காரணம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

ஜனாதிபதிக்கு லட்சக்கணக்கான தமிழ் மக்கள் அமோக வரவேற்பு அளித்ததுடன், சென்னை நகரசபை உள்படப் பல ஸ்தாபனங்களும் அவரை வரவேற்று மரியாதை செய்தன. ராஜ பவனத் தோட்டத்தில் காட்சியளிக்கும் காந்தி மணி மண்டபத்துக்கு முதன் முதலாக ஜனாதிபதி விஜயம் செய்து, அங்கு நிகழ்ந்த பிரார்த்தனையில் கலந்து கொண்டதுடன், மக்கள் காந்திஜி காட்டிய வழியைப் பின்பற்ற வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார். ஜனாதிபதி பல்வேறு இடங்களிலும் நிகழ்த்திய அறிவுரைகள், மக்களின் மாசு படிந்த மனத்தைத் தூய்மைப் படுத்தும் அறவுரைகளாக அமைந்தன.

'' இன்று குதூகலமாக இருப்பதைக் காட்டிலும் நம்மை நாமே எச்சரிக்கை செய்து கொள்ள வேண்டிய தினமாகும். நாட்டில் எதிர்பாராத விபரீதங்கள் நிகழ்ந்திருக்கின்றன. நாம் அலட்சியமாக இருந்து விடும் பட்சத்தில் நமது சுதந்திரக் கப்பல் அபாய அலைகளில் சிக்கிக் கொண்டு விடும்'' என்று ராஜாஜி அவர்கள் எச்சரித்திருக்கிறார்.

'' சில மாதங்களாகப் பாரத மக்கள் காந்திஜி காட்டிய வழியிலிருந்து தவறி வருகிறார்கள். ஜீவாதாரமான பிரச்னைகளுக்கு அமைதியான, ஜனநாயக முறையில் பரிகாரம் தேடாமல், தெருக் கலகங்களில் ஈடுபட்டு வருகிறார்கள்'' என்று பாரதத்தின் பிரதமர் நேருஜி மனம் வருந்திக் கூறியிருக்கிறார்.

ஆம், ஒரு புறம் சுதந்திர தின விழாவைக் கொண்டாடுவதும், மற்றொரு புறம் அந்தச் சுதந்திரத்துக்குக் குந்தகம் விளைவிக்கும் பலாத்காரச் செயல்களில் ஈடுபடுவதும் பொருத்தமற்ற காரியம் என்பதையே தலைவர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர். பெறுதற்கரிய சுதந்திரத்தை ஈட்டிக் கொடுத்த தலைவர்களுக்கு நன்றிக் கடன் பட்டுள்ள மக்கள் அவர்களுக்கு மன வேதனையைக் கொடுக்கும் செயல்களில் இறங்காமல் இருப்பதுதான் முழுமுதற் கடமையாகும். அந்தக் கடமையை நிறைவேற்றுவதன் மூலம், அவர்கள் தங்களுக்கு மாத்திரமல்ல, தங்களுடைய சந்ததிகளுக்கும் நாட்டுக்கும் மகத்தான நன்மை செய்தவர்கள் ஆவார்கள்.

# இனிது ஊதி வந்தாய்!

இவ்விதழ் அட்டைச் சித்திரத்தைப் பார்த்தவுடன் நேயர்களுக்குக் குலசேகர ஆழ்வார் தாம் ஒரு கன்னியாக மாறிப் பாடிய பாடல் ஒன்று நினைவுக்கு வரும்.

பிருந்தாவனத்தில் நிகழ்ந்த ஒரு காட்சி.

கண்ணனின் மார்பில் நல்ல வனமாலை ஆடி அசைகிறது. முடியில் மயிற்பீலி அழகு செய்கிறது. இடையில் மெல்லிய ஆடை அணி செய்கிறது. இதழ்களில் குழல் வைத்து ஊதி வருகிறான். பக்கத்தில் அவன்மீது தூய காதல் கொண்ட பெண்கள் குழைந்து வருகிறார்கள்.

''இப்படிப்பட்ட காட்சியை மீண்டும் காண மாட்டோமா? கண்ணா! மீண்டும் எங்களுக்காக உன் குழல் ஊதி இசை பெருக்கிக் கொண்டு வரமாட்டாயா? அப்படி வந்து ஊதிவிட்டால் அந்தக் குரலில் பழைய இனிமை மீண்டும் வராதோ?''—இவ்வாறு ஏங்குகிறாள் ஒரு கன்னி. அந்தக் கன்னி யார்?

குலசேகர ஆழ்வார்தான்.

மங்கல நல் வனமாலை மார்பில்
இலங்க, மயில்தழைப் பீலிசூடி
பொங்கிள ஆடை அரையில்சாத்தி
பூங்கொத்துக் காதிற் புணரப் பெய்து,
கொங்கு நறுங் குழலார் களோடு
குழைந்து, குழல் இனிது ஊதிவந்தாய்
எங்களுக்கே ஒருநாள் வந்தூத
உன் குழலின் இசை போதராதே!

குலசேகரப் பெருமான் சிருஷ்டித்த கன்னி பார்க்க விரும்பிய அருமையான காட்சியை ஓவியர் கனுதேசாய் அற்புத வண்ண ஓவியமாகத் தந்திருக்கிறார்!



# Coronet

## பி.ஓ.ஏ.ஸி. காரோனெட்

### டூரிஸ்ட் ஸர்வீஸ் மூலம் பறந்து செல்லுங்கள்

பி.ஓ.ஏ.ஸி. 'காரோனெட்' ஸர்வீஸ்கள் மூலம் பிரயாணம் செய்வது உங்கள் வருமான சக்திக்குட்பட்டதே. குறைந்த டூரிஸ்ட் கட்டணங்கள். ராஜபோகம், நான்கு ரோல்ஸ் ராய்ஸ் என்ஜின்கள் பொருத்தப்பட்ட ஆர்கோனட் விமானம் காற்றழுத்தமுள்ளதும் ஏர்கண்டிஷன் செய்யப்பட்டதுமாகும். இரண்டு விசாலமான காபின்களைக் கொண்ட இந்த விமானம் நிசப்தமாய் ஓடுகிறது. இதன் மூலம் பம்பாய், கல்கத்தா, டில்லி ஆகிய இடங்களிலிருந்து மேற்கத்திய அல்லது கிழக்கத்திய நாடுகளுக்கு பறந்து செல்லுங்கள். போதுமான இடவசதி, ருசிமிக்க இலவச உணவு, மதுபானவகைகள். வழியில் எங்கு வேணுமானாலும் தங்கலாம். கிழக்கு அல்லது மேற்கத்திய நாடுகளுக்குப் போவதற்கு பல வேறு மார்க்கங்கள் மூலம் ஸர்வீஸ்கள் உள்ளன. இந்தியாவிலிருந்து புறப்படும் எல்லா விமானங்களிலும், முன் ஏற்பாட்டின்படி, இந்திய ஆகார வகைகள் வழங்கப்படும்.

விபரங்களுக்கு உங்கள் ஊரிலுள்ள பிரயாண ஏஜெண்டையோ
அல்லது பம்பாய், கல்கத்தா, டில்லி, மதராஸிலுள்ள பி.ஓ.ஏ.ஸி.
ஆபிஸையோ விசாரியுங்கள்.

பி.ஓ.ஏ.ஸி. உங்கள் நலனைக் கருதி சேவை செய்கிறது

# FLY B·O·A·C

பி. ஓ. ஏ. ஸி. விமானமூலம் பறந்து செல்லுங்கள்

பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேஸ் கார்ப்பரேஷன்

# தமிழ் கூறும் நல்லுலகம்

## தட்சிண பாரத சமாஜம்

இந்த வருஷ சுதந்திர தினத்தைக் குழந்தைகள் தினமாக சமாஜம் கொண்டாடியது. ரயில்வே அமைச்சர் திரு ஓ. வி. அளகேசன் தலைமை வகித்தார். கரோல்பாகில் உள்ள தென்னிந்தியக் குழந்தைகளும் அவர்களுடைய பெற்றோர்களும் பெரும் திரளாக வந்து விழாவைச் சிறப்புறச் செய்தார்கள்.

இவ்விழாவின் விசேஷ அம்சம் குழந்தைகளே தங்களுடைய விழாவை நடத்திக் கொண்டதுதான். அழைப்பிதழ் அனுப்புவது முதல், தலைவருக்கு வரவேற்புரை அளிப்பது வரை குழந்தைகளே திறம்படச்செய்தார்கள்.




இவ்விழாவை ஒட்டிப் பல ஓட்டப் பந்தயங்களும் போட்டிகளும் நடந்தன. எல்லாக் குழந்தைகளும் இதில் குதூகலமாகப் பங்கெடுத்துக் கொண்டன. கோலாட்டம், தேகப் பயிற்சி, பரிசளிப்பு இவைகளுடன் கொடி ஏற்று விழாவும் சேர்ந்து இந்த நிகழ்ச்சி ஒரு விசேஷ கொண்டாட்டமாக நிறைவேறியது. குழந்தைகள் உற்சாகமாகத் [தேகப்பயிற்சி செய்வதையும், உதவி ரயில்வே மந்திரி ஸ்ரீ ஓ. வி. அளகேசனையும் படத்தில் காணலாம்.

## பாரதி சங்கம்

ராஜ்கோட்டிலுள்ள தமிழ் அபிமானிகள் ஒன்று சேர்ந்து "பாரதி சங்கம்" என்ற ஒரு குழுவை நிறுவி இலக்கியம், கலை முதலியவை களை வளர்த்து வருகின்றனர்.

அவர்கள் 'கல்யாண மந்திரத்தில்' சுதந்திர தினத்தை யொட்டி ஒரு கூட்டம் நடத்தினார்கள். இந்தக் கூட்டத்தில் இந்தியாவின் முன்னேற்ற சாதனைகளைப் பற்றியும், சரித்திர வரலாறுகளைப் பற்றியும் திருவாளர்கள் சீனிவாச ராகவன், கோபாலகிருஷ்ணன், ரா. கோபாலன், எஸ். எஸ். மணியன் முதலியவர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள்.

அமரகவி பாரதியாரின் விழாவையும் சிறப்பாக நடத்துவதற்கு இச் சங்கத்தார் ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள் என்று அறிகிறோம். அங்குள்ள தமிழ்ப் பெரு மக்கள் இம் முயற்சிக்குப் பேராதரவு தருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## தென் இந்தியக் கலைமன்றம்

விஜயவாடா தென் இந்தியக் கலைமன்றத்தார் இவ்வருடம் சுதந்திரதின விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினர். விழாவுக்குத் தட்சிண ரயில்வே டிவிஷனல் கமர்ஷியல் சூப்பரின்டெண்ட் ஸ்ரீ சி. வி. பி. மேனன் அவர்கள் தலைமை வகித்தார். காலையில் தேசியக் கொடி ஏற்றிப் பறக்க விட்டார். திருவள்ளுவர் தமிழ்ப்பள்ளி மாணவ மாணவிகளுக்குத் தின்பண்டங்கள் வழங்கப்பட்டன. மாலையில் திருவள்ளுவரின் திரு உருவப் படத்தை ரயில்வே ஊழியர் ஸ்ரீ ஜி. குருசாமி அவர்களும், நேதாஜி படத்தை ஹிந்துஸ்தான் இன்ஷூரன்ஸ் கம்பெனி காரியதரிசி ஸ்ரீ ஐ.கே. ராய் அவர்களும், ஸ்ரீ ராஜேந்திரப் பிரசாத் படத்தை விழாத் தலைவர் ஸ்ரீமேனன் அவர்களும் திறந்து வைத்துச் சொற்பொழிவாற்றினார்கள். மாணவ மாணவிகளின் கும்மி, கோலாட்டம் போன்ற கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. சர்க்கார் செய்தி இலாகாவின் வரலாற்றுப் படம் காட்டப்பட்ட பின் விழா இனிது முடிவுற்றது.

## ஜமால்பூர் தமிழ்ச் சங்கம்

ஜமால்பூர் தமிழ்ச் சங்கத்தின் இரண்டாவது பேரவைக் கூட்டம் ஆகஸ்டு ஐந்தாந் தேதியன்று சங்கக் கட்டடத்தில் நடந்தது. பேரவையில் புதிய நிர்வாக சபைத் தேர்தலும் நடைபெற்றது. 1956–57 ம் வருடத்துக்கு ஸ்ரீமான்கள் வி. ஜி. பாஷ்யம் தலைவராகவும், ம. நாராயணசாமி உபதலைவராகவும், ஆ. ராஜகோபாலன் காரியதரிசியாகவும், வி. கிருஷ்ணமூர்த்தி துணைக் காரியதரிசியாகவும், அ. மா. நரசிம்மன் நூல் நிலையக் காப்பாளராகவும், பு. ரா. ராஜப்பா கணக்குப் பரிசோதகராகவும், எம். ஜி. நாயரும் எஸ். ராமசந்திரனும் நிர்வாகக் குழுவின் அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

சங்கத்தின் புது நிர்வாகிகள் திறமையுடன் வேலை செய்து வட இந்தியாவில் தமிழ் நாட்டின் சிறப்பை உயர்த்தப் பாடுபடுவார்கள் என்று நம்புகிறோம்.

## லைநகரில்
## தந்திர விழா

நேருஜி புது டில்லியில் சுதந்திர தினத்தன்று மகாத்மாவின் சமாதிக்குப் புஷ்பாஞ்சலி செய்து வணங்கினர். நேருஜியுடன் அவருடைய பேரக் குழந்தைகளையும் இந்திரா காந்தியையும் படத்தில் காணலாம். நேருஜி அன்று செங்கோட்டையில் தேசியக் கொடியை ஏற்றிவைத்து, பெருந்திரளான கூட்டத்திடையே சுதந்திர தினச் சொற்பொழிவு நிகழ்த்தினர்.





# ஜனாதிபதியின் சென்னை விஜயம்





ஜனாதிபதி ராஜன்பாபு இவ்வருஷ சுதந்திர தின விழாவைச் சென்னை நகரில் குதூகலமாகக் கொண்டாடினார்.

1. சென்னை நகரசபையார் அவருக்கு ஒரு வரவேற்பு உபசாரம் நடத்தினார்கள். படத்தில் மேயர் ராமநாதய்யர், கமிஷனர் பாலசுந்தரம் முதலியவர்கள் நிற்பதைக் காணலாம்.

2. ஜனாதிபதி ரயிலில் வந்து இறங்கியதும் ஸ்டேஷன் வாசலில் அவருக்கு ராணுவ மரியாதை செய்யப்பட்டது.

3. கிண்டி ராஜபவனம் காந்தி மண்டபத்தில் நடைபெற்ற மாபெரும் பிரார்த்தனைக் கூட்டத்தில் கலந்துகொண்டு பேசினார். பிரார்த்தனை





ண்டபத்தில் கூடியுள்ள திரளான
க்களுக்கு முன் ராஜன் பாபு
சகம் காட்சி.

4. சுதந்திர தினத்தன்று ஆறு
குதிரைகள் பூட்டிய ரதத்தில் ஜனாதி
தி ஊர்வலம் நடைபெற்றது. இரதத்
க்கு முன்னும் பின்னும் டில்லியி
ருந்து வந்திருந்த குதிரைப் படை
னர் அணிவகுத்துச் சென்றார்கள்.

5. இலண்டு மைதானத்தில் ஜனாதி
தி பூச்சக்கரக் குடையின் கீழ்
ற்றிருக்கும் காட்சி.

6. இராணுவ அணிவகுப்பு மரி
ாதையை ஜீப்பில் நின்றவண்ணம்
ர்வை விடுகிறார்.





உங்கள் சிறு சேமிப்பின் மூலம் பெரும் காரியங்களைச் சாதிக்கலாம்



# ரகுபதி ராகவ

## 41

**[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]**

ஒரு சமயத்தைப் பிரசாரம் செய்ய வேண்டுமானால் அதற்கு ஒரு வழிதான் உண்டு. அந்தச் சமயத்தின்படி தன் வாழ்க்கையை நடத்தி அதன் மேன்மையைக் காட்டுவதே வழியாகும். வாய்மொழிப் பிரசாரம் எனக்குப் பிடிக்கவே இல்லை. சொற்பொழிவுகள் செய்யும் உபதேசிகளைக் கண்டால் எனக்கு எப்போதும் சந்தேகம். வாயைத் திறவாமல் தங்கள் அறிவுக்கு எட்டின வகையில் சமயக் கொள்கைகளின்படி வாழ்க்கை நடத்துகிறவர்களை அவர்கள் எந்தச் சமயத்தினராயினும் நான் மிகவும் பாராட்டுவேன். மௌனமாகத் தங்கள் சமயங்களைப் பிரசாரம் செய்யும் இத்தகையவர்களுக்கு நான் வணங்குவேன். எளிய வாழ்க்கை நடத்தி ஏழைகளுக்கும் மற்றவர்களுக்கும் பணி செய்வதே உத்தமப் பிரசாரம். ஒரு மல்லிகைப் புஷ்பம் தன்னுடைய சுவாசனையைப் பற்றிப் பேசுவதில்லை. வாசனையை வீசி மௌனமாக இருக்கிறது. அதன் கந்தமே அதன் உபந்நியாசமாகும். ஆட்களை வைத்து உபதேசகர்களைச் சம்பளம் கொடுத்து அமைத்து யாராவது ஏற்பாடு செய்தாலும் மல்லிகை புஷ்பம் வாங்குபவர்களின் எண்ணிக்கை உயராது. அதன் வாசனையைக் கண்டு வாங்குபவர்கள் தான் வாங்குவார்கள். ஒரு சமயத்தில் பக்தி வைத்து வாழ்க்கை நடத்துகிறவனுடைய பரிமளமும் பூவின் மணத்தைப் போன்றதே யாகும். பூவின் மணத்தைக் காட்டிலும் அதிக வேகமாகவே வீசிப் பரவும்.

**[ஹரிஜன், 29—3—35]**

என்னுடைய மதத்தை நான் விட்டு விட விரும்பவில்லை. அவ்வாறே ஒரு கிறிஸ்தவனையாவது முஸல்மானையாவது பார்ஸி அல்லது யூதனையாவது அவனுடைய மதத்தை விட்டு விட்டு என் மதத்தை ஏற்றுக் கொள்ளும்படி கேட்கமாட்டேன். அவரவர்கள் சமயத்தின்படி அந்தச் சமயத்தின் பெயரைச் சொல்லிக் கொள்கிறவர்கள் நடப்பதில்லை. இந்தக் குறை ஹிந்துக்கள் உட்பட எல்லா மதத்தினரையும் பாதிக்கிறது. என் மதத்தைச் சேர்ந்தவர்களை என்னால் சீர்திருத்த முடியவில்லை. ஏன், என் மதத்தின்படி முற்றிலும் சரியாக நான் நடந்து கொள்வதே மிகச் சிரமமாக இருக்கிறது. இப்படியிருக்க நான் பிற மதத்தினர்களுக்கு உபதேசப் பிரசாரம் செய்ய முயல்வேனா? கனவிலும் எண்ணமாட்டேன். பிறர் குற்றம் கண்டு பிடிப்பதற்கு முன் ஒருவன் தன்னுடைய குற்றங்களைக் கண்டு பயந்து மற்றவர்களைக் குறை சொல்லாமலிருக்க வேண்டும். என்னுடைய உறுதியான முடிவு என்னவென்றால், செல்வமும் செல்வாக்கும் படைத்த கிறிஸ்தவ சங்கங்கள் இந்தியாவுக்குச் சேவை செய்ய விரும்பினால் மதத்தை மாற்றும் கருத்தை விட்டு விட்டு மக்களுக்கு வேறு வழிகளில் பணி செய்து உதவ வேண்டும். இந்திய மக்களையாவது அல்லது கிராமங்களிலுள்ள பாமரர்களையாவது கிறிஸ்தவர்களாக்க வேண்டும் என்ற நோக்கத்தை முற்றிலும் விட்டுவிட்டு அவர்களுக்குப் பணி செய்ய வேண்டும். பழக்க வழக்கங்களில் எவ்வளவு குற்றங் குறைகள் இருந்தபோதிலும் அவை இவ்வளவு காலமும் சமூகத்துக்குக் காப்பாக இருந்து வந்தன. பாதிரிமார்கள் என்ன விரும்பியபோதிலும் நாமே என்ன விரும்பிய போதிலும் ஹிந்து சமயத்தில் எது உண்மையோ அது நிற்கும். எது பொய்யோ அது கழிந்துவிடும். இதைப் பற்றிச் சந்தேகமில்லை. சமயங்கள் உயிர் கொண்டிருப்பதும் மறைந்து போவதும் அவற்றுள் கிடக்கும் ஜீவ சக்தியைப் பொறுத்தது.

**[ஹரிஜன், 28—9—35]**

என்னுடைய அபிப்பிராயத்தில் கிறிஸ்தவ மதத்தில் இருப்பது போல் ஹிந்து சமயக் கோட்பாடுகளில் மத மாற்றத்துக்கு இடம் கிடையாது. இஸ்லாம் மதத்தில் ஓரளவு இடம் உண்டு என்று சொல்லலாம். ஆரிய சமாஜத்தைச் சேர்ந்தவர்கள் இந்த விஷயத்தில் கிறிஸ்தவக் கோட்பாட்டைப் புதிதாக அனுசரித்து வருகிறார்கள். கிறிஸ்தவர்களைப் பார்த்து நாமும் ஏன் இவ்வாறு செய்யலாகாது என்று ஆரம்பிக்கப்பட்டிருக்கும் இந்தப் புது முறை எனக்குப் பிடிக்கவில்லை. இதனால் நன்மை யொன்றுமில்லை. தீமையே அதிகம். ஆன்மாவை ஒட்டியது மதக் கொள்கை. ஆண்டவனை அணுகும் வழி சமயம். அதுபோய் லௌகிக லாபத்தை

அனுசரித்து மத மாற்றங்கள் நடை பெறுகின்றன. ஹிந்து சம்பிரதாயத்தில் அடங்கியுள்ள தத்துவம், எல்லா மதங்களுமே உண்மை என்று போதிக்கிறது. எல்லா மதங்களுமே ஆண்டவனைப் போய்ச் சேரும் வழிகள். அவை எல்லாமே ஆண்டவன் காட்டிய வழிகள். மனிதனுடைய வாக்கின் வழியாக வந்த ஞானத்தில் மனிதனுடைய குறைகள் ஓரளவு கலந்து இருக்கின்றன. அவ்வளவே. நியாயமாக நடத்த வேண்டிய சுத்தி இயக்கம், அவரவர் தத்தம் சமயாசாரங்களைத் திருத்திக் கொள்வதே யாகும். பிறருடைய சமயத்தைத் திருத்துவதில் இல்லை. தத்தம் குணங்களைத் திருத்திக் கொள்ள வேண்டும். ஒரு அறையை விட்டு இன்னொரு அறைக்குப் போவதில் என்ன பிரயோசனம்? என் மதத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் வாழ்க்கையில் கடவுளை மறந்து நடந்து கொண்டிருக்கும் போது, மற்றவர்களை நான் எப்படித் திருத்த முடியும்? என் வியாதியை நான் தீர்த்துக் கொள்ள முடியவில்லை. மற்றவர்களிடம் சென்று ''நான் வைத்தியன். உங்கள் வியாதியைத் தீர்ப்பேன்'' என்று சொன்னால் அது செல்லுமா? செல்லாது. சரீர வியாதி விஷயத்தில் செல்லாதது ஆன்ம விஷயத்தில் செல்லுமா?

[யங் இந்தியா. 29—5—24]

# ஒரு அன்பரின் கடிதம்

**''ரகுபதி ராகவ'' என்னும் கட்டுரைத் தொடரை ஒழுங்காகப் படித்து வரும் ஒரு கிறிஸ்துவ வாலிபர், மனம் உருகி இலங்கையிலிருந்து ராஜாஜிக்கு எழுதியிருக்கும் கடிதத்தையும், அவருக்கு ராஜாஜி எழுதியுள்ள பதிலையும் கீழே தந்திருக்கிறோம். —ஆசிரியர்**

ஐயா! முன் பின் அறியாத நான் எனது சிறிய வேண்டுகோளுக்குப் பதில் அளிப்பீர்களென்று நம்பி என் கோரிக்கையை உங்கள் சமூகத்திற்குச் சமர்ப்பிக்கிறேன். தங்களைப் போன்ற பேரறிஞர்களுக்குக் கடிதம் எழுத நான் பாத்திரனல்லன். ஆயினும், தங்கள் மேலுள்ள அளவற்ற மதிப்பினாலும் அன்பினாலும்தான் நம்பிக்கையுடன் இக் கடிதத்தை எழுத முன் வந்தேன்.

'கல்கி'யில் தாங்கள் எழுதிவரும் ''ரகுபதி ராகவ'' கட்டுரையை நான் ஆரம்ப முதல் படித்து வருகிறேன். நானும் தங்களைப் போன்று பாரதநாட்டுப் பிரஜை என்பதை நினைத்துப் பெருமைப்படுகிறேன். நான் கிறிஸ்தவ சமயத்தைச் சேர்ந்தவன் என்பதை நான் எழுதுமுன் என் பெயரைப் பார்த்ததுமே தாங்கள் தெரிந்துகொள்வீர்கள் என்று நம்புகிறேன். தாங்கள் எழுதும் கட்டுரைகள் ஒவ்வொன்றும் உண்மையாகவே என் மனத்தைத் தட்டி எழுப்புகிறது. இப்பேர்ப்பட்ட உயரிய கருத்துக்கள் எங்கள் மத நூலாகிய பைபிளிலும் காணவில்லை. ஒரு வேளை அது என் அறியாமையோ என்னவோ தெரியவில்லை. பைபிளைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு சிறந்த ஆத்ம போதனையாகவே நான் தங்கள் கட்டுரையை எண்ணுகிறேன். எங்கள் பைபிள் மற்ற மதத்தவர்களைக் குறைகூறுகிறது. கேவலமாகவும் எழுதப்பட்டிருக்கிறது என்பதையும் நான் வெட்கத்துடன் ஒப்புக்கொள்கிறேன். ஆனாலும் தாங்கள் எழுதியது போலக் குறைகளை விட்டு விட்டு நன்மையானவற்றைப் படிக்கப் பிரயாசைப்படுகிறேன்.

நான் எழுதியவற்றுள் ஏதேனும் தவறுதல் இருந்தால் பொறுத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன். தாங்கள் நீடூழி காலம் வாழ்ந்து என் போன்ற சிறுவர்களுக்கு நல்ல போதனைகள் தருவதற்கும், அழிவுப் பாதையில் செல்லும் எங்களை நல்வழிப் படுத்திக் காப்பதற்கும் இறைவன் அருள்புரியும்படி வேண்டிக் கொள்கிறேன். கூடிய சீக்கிரம் தங்களுடைய அன்பான திருப்தியான பதிலை எதிர் பார்க்கிறேன். வணக்கம்.

* * *

**ஆசீர்வாதம். உம்முடைய கடிதம் என் உள்ளத்தைக் கரைத்தது. ஆண்டவன் உமக்கு அருள்வானாக. பைபிளில் காணப்படும் கருத்துக்களில் குறைகூற வேண்டாம். கன்றாகப் படித்துப் பார்ப்பீராயின் மிகச் சிறந்த கருத்துக்களைக் காண்பீர். பிறந்த குலத்தில் மதிப்பு இழக்கலாகாது. பைபிளையும் ஏகநாதரையும் நான் மிகவும் மதித்து வருகிறேன். காந்தியும் மதித்தார். சந்தோஷமாகவும் பக்தியுடனும் ஏகநாதர் சரித்திரத்தை லூக், மாத்யூ, மார்க் முதலிய அத்தியாயங்களில் படிப்பீராக.**

**ஆசியுடனும் அன்புடனும்,**

**இராஜகோபாலாச்சாரி**

*Your Finishing Touch of Loveliness*

BARBARA STANWYCK
Beautiful Star of R.K.O.
in the Technicolor film
"Escape to Burma"

*finest-in-the-world* **FACE POWDER**

by **MAX FACTOR** HOLLYWOOD



**. . . makes your skin look fresh, clear, naturally-lovely!**

★ It's true! MAX FACTOR FACE POWDER is indispensable to a perfect make up. It adds the *finishing touch of loveliness* that make up really needs. You just can't be perfectly, beautifully groomed without it! Incredibly soft and feather-light, it's a powder with magical stay-on powers that gives your skin a fresh, glamorous smoothness and warm, radiant, just-right color loveliness. You'll love its delicate, exquisite fragrance, too. Try it today.

*It's like a veil of fascinating flattery on your skin!*

quick, easy way to apply it!

1.
Powder profusely, starting at chin and continuing over entire face, applying to [illegible].



2.
Press powder lightly into tiny lines around the eyes, nose, mouth, and blend [illegible].



3.
Lightly brush away surplus with Powder Brush and you'll have the beautiful finishing touch to your make up that only Max Factor Powder can give you.



SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD., MADRAS, BOMBAY, CALCUTTA.

**எல்லோருக்கும் தெரியும் —**







ஆகையால்தான்
மற்றெந்தத்
தேயிலையையும் விட
அதிகப்படியான
ஜனங்கள்

# ப்ரூக் பாண்ட் தேயிலையையே

அருந்துகிறார்கள் !

# அபலை அஞ்சுகம்

### 8. இவர்தான் விஜயரங்கம்

சொக்கன் அந்த விட்டின் கதவைத் தட்டியதும் அழகே உருவான நிர்மலாவைக் கண்டு திகைத்து நின்றான் அல்லவா? ஆனால் அதை விட அவனை அதிசயத்தில் ஆழ்த்தியது நிர்மலா உபசரித்து வரவேற்றதுதான். அது அவனுக்குச் சிறிது விசித்திரமாகவே இருந்தது. அவள் தன்னை அவ்வளவு பயத்தோடு வரவேற்பாள் என்று சொக்கன் நினைக்கவே இல்லை. அவள் முகத்தில் ஏதோவொரு பயத்தின்



அறிகுறி தோன்றியிருப்பதை அவன் பளிச்சென்று தெரிந்து கொண்டான். அவள் தன்னுடைய பயத்தையும் தடுமாற்றத்தையும் சமாளித்துக் கொள்ளப் பிரயத்தனப் படுபவள் போல மெதுவாகச் சிரித்துக்கொண்டே, ''நீங்கள் யார்?'' என்று கேட்டாள் சிறிது பதட்டத்துடன்.

''நீங்கள்தானே பார்வதி அம்மாளின் ஏஜண்ட் நிர்மலா தேவி?'' என்றான் சொக்கன் சிறிது தயக்கத்தோடு.

நிர்மலா அவன் முகத்தை உற்றுப் பார்த்து விட்டு, ''ஆமாம். நீங்கள் இந்த வீட்டு எஜமானிக்கு உறவினரா? அவர்களைப் பார்க்க வேண்டுமா? அவர்கள் மிகவும் களைப்பாக இருக்கிறார்கள்'' என்றாள் சிறிது நடுங்கிக் கொண்டே. சொக்கனின் உடைகள் அவனுடைய அந்தஸ்தை ஒரு வகையில் புலப்படுத்தினாலும் அவனைக் கொஞ்சம் கண்யமான மனிதனாகவேதான் கருதினாள் என்பது அவள் பேச்சிலிருந்து தெரிந்தது.

''நான் அவர்களைப் பார்க்க வேண்டாம். உங்களைத்தான் நான் பார்க்க வந்தது. நான் உங்களிடம் தனிமையில் சில விஷயங்கள் பேசவேண்டும்'' என்று கூறினான் சொக்கன் துணிச்சலாக.

சொக்கனைக் கண்டதும் நிர்மலா ஏன் திகைப்படைந்து நின்றாள் என்ற ரகசியம் அவனுக்குத்தான் தெரியும். அவனைப் பார்த்ததும் , அவளுக்கு ஏற்பட்ட நிலை அவனைச் சிறிது சிந்திக்கவும், திகைக்கவும் வைத்தது. அவளுடைய நிலையை அவனும் சிறிது உணர்ந்துகொண்டான். ஏதோ அவள் எதிர்பாராத விதமாக நடந்திருக்க வேண்டும்; அல்லது அவள் தான் செய்த குற்றத்துக்காக எவரைக் கண்டாலும் திகைத்து மிரளக் கூடிய நிலையை அடைந்திருக்க வேண்டும். ஒரு பெரிய குற்றத்தைச் செய்து விட்டவர்கள் இப்படி நிலை தடுமாறித் தவிப்பது சகஜம்தானே?

''நீங்கள் என்னோடு தனிமையில் பேச வேண்டுமா? அப்படியென்றால் உள்ளே வாருங்கள்'' என்றாள் அவள், அவனை ஒருவிதமாகப் பார்த்துக் கொண்டே.

அவளைப் பின் தொடர்ந்தான் அவன். அவர்கள் அந்த வீட்டிலிருந்த ஒரு பெரிய கூடத்துக்கு வந்தார்கள். அவள் சொக்கனை வீட்டுக்குள் தாராளமாக அழைத்தது அவனுக்கே வியப்பாக இருந்தது. அவன் அந்த வீட்டுக் கூடத்துக்கு வந்து நின்று சுற்றிலும் தன் பார்வையை ஒரு தடவை செலுத்திய பொழுது அங்கு சுவரில் மாட்டி இருந்த பெரிய புகைப்படம் ஒன்று மேலும் அவனை வியப்பில் ஆழ்த்தக் கூடியதாய் இருந்தது. அது ஒரு இளைஞனின் புகைப் படம். அந்த உருவம் தன்னையே ஒத்ததாக இருப்பதை அவன் உணர்ந்தான். அது தன்னையே படம் எடுத்து மாட்டி வைத்திருப்பதுபோன்ற உணர்ச்சியை அவனுக்கு ஏற்படுத்தியது. தன் படம் அங்கு எப்படி வந்தது என்ற ஆச்சரியம்தான் அவ



னுக்குப் பெரிதாக இருந்தது. அவன் அப்படி ஒரு புகைப்படம் எடுத்துக் கொண்டதில்லை. ஆனால் அந்தப் புகைப் படத்திலுள்ள உருவம் அவனுடைய சாயலாகவே இருந்தது. உடையில் சிறிது வித்தியாசம் இருந்தாலும் முகச் சாய லெல்லாம் அவனைப் போலவே இருந் தது. அவனை ஒத்த வயதுதான் அந்த வாலிபனுக்கும் இருக்கும். அந்தப் படத் திலிருந்த உருவத்துக்கும் அவனுக்கும் ஏதேனும் சிறிது மாறுதல் இருந்தால் அவனுக்கு ஏழைமையால் ஏற்பட்ட முக வாட்டத்தின் குறிகளை வேண்டு மானல் சொல்லலாம். சொக்கன் கண் களில் நிறைந்திருந்த அதே அலட்சியப் பார்வை, புன்சிரிப்பு முதலிய இயற்கை அம்சங்களை யெல்லாம் அப்படியே அந் தப் புகைப் படமும் பிரதிபலித்தது.

அந்தப் புகைப்படத்தைப் பார்த்த தும் சொக்கனின் மனத்தில் சட் டென்று ஒரு எண்ணம் உதயமாகியது. நிர்மலா தன்னைக் கண்டதும் ஏன் திகைப்படைந்து நின்ருள் என்பதற்கு அந்தப் புகைப்படமும் ஒரு காரண மாக இருக்கு மென்று தெரிந்து கொண்டான். அவ்வளவு நேரமும் அந்தப் புகைப் படத்தையே பார்த் துக் கொண்டிருந்த சொக்கன் சட் டென்று திரும்பி நிர்மலாவிடம், "நீங்கள் என்னைப் பார்த்ததும் எஜ மானியம்மாளுக்கு உறவினரா என்று கேட்டீர்களே ஏன்?", என்ருன்.

நிர்மலா சிரித்தபடியே அவன் இவ்வளவு நேரமும் எந்தப் படத்தைப் பார்த் துக் கொண்டிருந்தானே அந் தப் படத்தைச் சுட்டிக் காட்டினுள். அவனும் ஏதோ புரிந்து கொண்டவன்போல் சிரித்தான். அவனுடைய புன் முறுவல் 'ஏற்கனவேயே அவனை யார் என்று புரிந்து கொண்டு விட்டேன்' என்று சொல்லுவது போல் இருந் தது. அவள் தன்னைத் தவருக நினைக்கிருள் என்பதை அவன் கண நேரத்தில் தெரிந்து கொண்டு விட் டான். அவன் எதுவும் புரிந்து கொள்ளாதவன் போல் பரபரவென்று விழித்த வண்ணமே நிர்மலா வைப் பார்த்தான்.

"அந்தப் படத்தில் இருப் பவர் யார் என்று தெரியுமா? இந்த வீட்டு எஜமானியின் தங்கை மகன். எஜமானி அம் மாளும் அவள் தங்கையும் ஒரே புருஷ னுக்கு வாழ்க்கைப் பட்டவர்கள். அவர் பெயர் விஜயரங்கன்" என்று சொல்லி விட்டுச் சொக்கனின் முகத்தை உற்றுப் பார்த்தாள். பிறகு தொடர்ந்து, "அவரை நான் ஒரு தடவை கூடப் பார்த் ததில்லை. அவர் சில வருடங்களுக்கு முன் சித்த ஸ்வாதீனமற்றவராகி எங்கோ போய் விட்டாராம். மூன்று வருட கால மாக அவரைப் பற்றி எந்தச் செய்தியும் கிடையாது. ஒரு வேளை இறந்து போயிருந்தாலும் இருக்கலாம்" என்று கூறினள் நிர்மலா, விஷமமாகச் சொக் கனைப் பார்த்துக் கொண்டே.

"சரிதான். அந்தப் பையன் மீது ஏற்பட்ட பிரியத்தின் காரணமாகத் தான் இவ் வீட்டு எஜமானியம்மாள் இந்தப் படத்தை இங்கு மாட்டி வைத் திருக்கிருர் போலும்!...." என்ருன் சொக்கன் நிர்மலாவிடம்.

"ஆமாம்! எஜமானி யம்மாளுக்கு அவரைத் தவிர இந்த உலகத்தில் வேறு உறவினர்களே இல்லை. இவ்வளவு



சொத்தும் அவரைச் சேர்ந்ததுதான்'' என்று கூறினாள் நிர்மலா.

''அதிர்ஷ்டக்காரன்—இப்படி யாராவது ஏராளமான சொத்தை அடைந்து விட முடியுமா? ஆனால் சரியான மூளை உள்ளவர்கள் அடைவது பெரிய காரியமில்லைதான். எப்பொழுதுமே சிலர் தங்கள் மூளையாலும், சாமர்த்தியத்தாலும் பிறருடைய பொருளைத் தங்களுடையதாக்கிக்கொள்வதை நான் வரவேற்பேன். அது கொள்ளையோ, ஏமாற்று வித்தையோ, நியாயத் தவறுனதோ ஆகாது. உனக்குப் புத்திசாலித் தனம் இருந்தால் இந்தச்சொத்துக்களை நீயே அடையமுடியும். அதை நான் உனக்கு உணர்த்த வேண்டும் என்பதற்காகத்தான் உன்னைப் பார்க்க இங்கு வந்தேன்'' என்றான் சொக்கன் மிகவும் சுவாதீனமாக. அவளைப் பற்றி மிகவும் நன்றாகத்தெரிந்தவன் போல்பேசினான்.



நிர்மலா அவன் முகத்தை உற்றுப் பார்த்துவிட்டுக் குறும்பாகச் சிரித்துக் கொண்டே, ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லையே?'' என்றாள்.

''நான் புரிய வைக்க மாட்டேனா? என் பெயர் சொக்கன். தேவிப்பட்டினத்திலுள்ள அவ்வளவு திருடர்களிலும், போக்கிரிகளிலும் ஒரு யோக்கியன் உண்டென்றால் அது நான்தான். எல்லாத் திருடர்களின் நம்பிக்கைக்கும் பாத்திரமானவன் ஒருவன் உண்டு என்றால் அது இந்தச் சொக்கன் தான். ஆனால் நீங்கள் என்னைத் தாராளமாக நம்பலாம். இங்கே அஞ்சுகம் என்ற பெண் வேலைக்கு இருந்தாளே தெரியுமா? அவளுடைய சிநேகிதன் நான். அவள் காதலன் என்று கூடச் சொல்லலாம். என்னை விட்டால் அவளுக்கு உலகம் இல்லை. அவளை விட்டால் எனக்கு உலகம் இல்லை. சிறிது நேரத்துக்கு முன்னால்தான் நான் அவளைப் பார்த்து விட்டு வருகிறேன்.....இங்கு நேற்று இரவு ஏராளமான நகைகள் களவு போனதும், அதை அவள்தான் திருடி இருப்பாள் என்று அவளைப் பிடிக்கப் போலீஸார் முயற்சி செய்வதும் எனக்குத் தெரியும். அவள் நிரபராதி என்பதும் எனக்குத் தெரியும்; உனக்கும் தெரியும்'' என்று சொல்லி நிர்மலாவின் முகத்தைப் பார்த்தான்.

நிர்மலா சிறிது ஆத்திரம் கொண்டவள் போல் ''நான் அவளை நிரபராதி என்று நினைக்கவில்லை. அப்படியானால் அவள் ஏன் போலீஸார் கண்ணில் படாமல் ஒளிந்து திரிய வேண்டும்? தானே போலீஸ் ஸ்டேஷனில் வந்து ஆஜராகி நிரூபிக்கலாமே?'' என்றாள்.

சொக்கன் அவளை அலட்சியமாகப் பார்த்தவாறு கூறினான்: ''செய்யலாம். ஆனால் அதற்கு வேண்டிய முன்னேற்பாடு செய்து கொள்ள வேண்டாமா? அதற்குத்தான் நான் முயற்சி செய்கிறேன். எனக்கு நன்றாகத் தெரியும், அவள் நிரபராதி என்று. மிகுந்த விலை பெறுமானமுள்ள ஏராளமான நகைகளைத் துணிச்சலோடு திருடியவர்கள் யாரென்றுதான் எனக்குத் தெரியவில்லை. அப்படி யாரேனும் இருந்தால், அவர்களும் இந்த வீட்டில் பழக்கப் பட்டவர்களாகவேதான் இருக்க வேண்டும். யாரோ சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொண்டு அந்த நகைகளைக் கொள்ளையடித்து விட்டுப் பேதைப் பெண்ணாகிய அஞ்சுகத்தின் மேல் பழியேற்படும்படியாகச் செய்திருக்கிறார்கள். அதனால் தான் நான் உன்னைப்பார்க்க வந்தேன்'' என்றான் சந்தேகத்தோடு அவளைப் பார்த்துக் கொண்டே.

''அதற்கு என்னை ஏன் பார்க்க வேண்டும்?'' என்று கேட்டுக் கொண்டே மெதுவாக நடந்து பக்கத்திலுள்ள அறைக்குள் நுழைந்தான் நிர்மலா.

சிறந்ததை
அறிவோர்
சொல்வது:

# துணிகளில் சிறந்தவை
# பின்னியின் துணிகள்

கலை, சங்கீதம் அல்லது அன்றாட விஷயங்கள், எதுவாயினும், சிறந்ததை தவறில்லாமல் தேர்ந்து கொள்ளும் திறமை சிலருக்குண்டு. கடந்த நூறு வருஷங்களாக பின்னியின் துணிகளையே கேட்டு வாங்குபவர்கள் அப்பேர்ப்பட்டவர்களே.

பின்னியின் துணிகள் தனிச் சிறப்பு வாய்ந்தவை என அவர்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். பின்னியின் துணிகளின் தனிச் சிறப்பிற்குக் காரணம், அநுபவம், ஆராய்ச்சி, மற்றும் எதிலும் சிறந்த துணிகளையே தயார் செய்வதென்ற உறுதியான கொள்கை, இவைகளே.






தி பக்கிங்ஹாம் அண்ட் கர்நாடிக் கம்பெனி லிட்.
தி பெங்களூர் உல்லன், காட்டன் அண்ட் ஸில்க் மில்ஸ் லிமிடெட்
நிர்வாகிகள் : பின்னி அண்ட் கம்பெனி (மதராஸ்) லிமிடெட், மதராஸ்

BY. 3461

சொக்கனும் அவளுடன் சென்று அந்த அறைக் கதவை உட்புறமாகச் சாத்திக் கொண்டு சட்டென்று அவளுக்குச் சமீபமாகப் போய் நின்றான். தன் பார்வையிலேயே உண்மையை அறிந்து கொண்டு விட்டவன் போல், "நாம் இருவரும் இங்கு இப்பொழுது தனியாக இருக்கிறோம். நாம் மனத்தை விட்டு இங்கு பேசிக் கொள்ளலாம். என்னைக் கண்டு நீ பயப்பட வேண்டாம். நான் போலீஸ் இலாக்காவைச் சேர்ந்தவனல்ல. துப்பறிகிறவனும் அல்ல. நான் என்னுடைய நன்மைக்காகவும் அஞ்சுகத்துக்காகவுமே இந்தக் காரியத்தில் பிரவேசித்திருக்கிறேன். எனக்கு நிச்சயம் தெரியும், அஞ்சுகம் இந்த நகைகளை எடுக்கவில்லை என்று. நீதான் அந்த நகைகளை எடுத்துக்கொண்டு தந்திரமாக இந்த வீட்டை விட்டு அவளைத் துரத்திவிட்டாய். அவள் மீது இந்தத் திருட்டுப் பழியும் ஏற்படும்படி செய்திருக்கிறாய். அதெல்லாம் தொலையட்டும். இப்பொழுது நாம் ஒரு சமாதானமான ஒப்பந்தத்துக்கு வர வேண்டுமென்பதுதான் என் ஆவல். இப்பொழுது நான் விரும்புவதெல்லாம் வேறொன்றுமில்லை. நீ திருடிய நகைகளில் எனக்கொரு பாகம் கொடுத்தாக வேண்டும். ஆம்! பாதிபாகம் கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் உனக்கு எதிராகத்தான் என் காரியங்கள் இருக்கும். நீதான் களவாடி இருக்கிறாய் என்பதற்கு எனக்கு இப்பொழுது ஆதாரம் கிடைக்காமல் இருக்கலாம். ஆனால் நான் முயற்சி செய்தால் ஆதாரம் கிடைக்காமல் போகாது. இப்பொழுது நான் உன்னை ஏதோ சமாதானம் செய்து லாபத்தை அடையப் பார்ப்பதாக நினைத்து விடாதே. நீ ஒரு சாமர்த்தியமான பெண் - புத்திசாலி! நான் வரும்போது மிகவும் ஆத்திரமாகவும் கோபமாகவும்தான் வந்தேன். ஆனால் இங்கு வந்ததும் உன் அழகு, வயது இவற்றைப் பார்த்ததும் உன்னுடைய காரியங்களுக்கு நம்பிக்கையான தோழன் ஒருவன் உனக்கு வேண்டும் என்று முடிவு செய்தேன். என்னைவிட உன்னோடு ஒத்துழைக்கும் மனிதன் கிடைப்பது துர்லபம்" என்று சொல்லி நிறுத்தினான் சொக்கன். அந்த அறையில் சிறிது நேரம் மௌனம் சூழ்ந்திருந்தது. நிர்மலா மனம் குழம்பிய வண்ணம் ஏதோ பலத்த யோசனையில் ஆழ்ந்திருப்பவள் போல் இருந்தாள்.

அந்த அறைக் கதவு மெதுவாகத் திறக்கப்பட்டது. தள்ளாடிய வண்ணம் அந்த வீட்டு எஜமானி "யார் அங்கே? ஏதோ பேச்சுக் குரல் கேட்கிறதே? யாராவது வந்திருக்காங்களா?" என்று



"நீ 'பிக்பாக்கெட்' இல்லேன்னு, ஏன் இவர் பின்னாலேயே நடந்தாய்?"

"நிழலுக்காக நடந்தேன், ஸார்!"

கேட்டுக் கொண்டே உள்ளே வந்து, தன் நெற்றியில் கையைச் சாய்த்து வைத்துக் கொண்டே தன் மங்கிய கண்களால் உற்றுப் பார்த்தாள்.

நிர்மலா பரபரப்போடு பார்வதியை நெருங்கி அவளுடைய கைகளைப்பிடித்துக் கொண்டு, "ஆமாம்! நீங்கள் ரொம்ப நாட்களாக யாரை எதிர்பார்த்தீர்களோ அவர்களே வந்திருக்காங்க. நீங்கள் யாரை 'மறுபடியும் பார்க்க முடியுமா, பார்க்க முடியுமா'ன்னு ஆர்வத்துடன் எதிர்பார்த்துத் துடித்துக் கொண்டிருந்தீர்களோ அந்த மனிதரே வந்திருக்கிறார்" என்றாள் சாகசத்தோடு.

நிர்மலா இப்படிச் சொன்னதும் அந்த வயதான கிழவியின் உணர்ச்சி நிலை கொள்ளாததாகப் போய் விட்டது. அவள் தன்னுடைய நடுங்கும் கைகளால் நிர்மலாவுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த வாலிபனின் தோளைத் தொட்டுத் தடவினாள். ஒளி மங்கி இருந்த கண்களிலும் ஒரு ஆர்வத்தின் துடிப்பு ஏற்பட்டது. "விஜயரங்கம்! இது உண்மைதானா? நீ மறுபடியும் வந்து விட்டாயா, கண்ணே....!" என்றாள் பார்வதியம்மாள் நடுங்கும் குரலில்.

அந்த நிமிஷம் சொக்கனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. நிர்மலா திடீரென்று அவனை இப்படி ஒரு சிக்கலில் கொண்டு வந்து நிறுத்தியது அவனை நிலை குலையச் செய்தது. இப்படி முன்னெச்சரிக்கையில்லாது தன்னை ஆள்மாறாட்டம் செய்து அந்தக் கிழவியிடம் நிர்மலா அறிமுகப்படுத்தி வைப்பாள் என்று அவன் நினைக்கவே இல்லை.

ஆனால் நிர்மலாவின் முகத்தில் சிறிதும் மாறுதல் ஏற்படவில்லை. அவள் இவைகளை யெல்லாம் முன் ஏற்பாடாகவே செய்தவள் போல்தான் தோன்றினாள். அவள் அப்பொழுது அவனைப் பார்த்துக் கண்களால் ஏதோ ஜாடை காட்டினாள். பார்வதியின் காதுகளில் விழாத வண்ணம் மெதுவான குரலில், "பேசாதிருங்கள். அவள் என்ன செய்தாலும் பேசாதிருங்கள். ஜாக்கிரதை. பெரியம்மா என்றே கூப்பிடுங்கள்" என்றாள்.

சொக்கனுக்கு அப்பொழுது வேறு வழியே புரியவில்லை. அவன் என்ன செய்வான்? "கவலைப்படாதே, பெரியம்மா!" என்று அனுதாபத்தோடு அந்தக் கிழவியைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லி வைத்தான்..

கிழவிக்கு இந்த வார்த்தை பேரானந்தத்தைக் கொடுத்து விட்டது. அவள் முன்னிலும் மிகுந்த ஆர்வத்தோடும் ஆசையோடும் சொக்கனைத் தழுவிக் கொண்டாள். தழு தழுத்த குரலில், "விஜயம்! உன்னைப்பிரிந்ததிலிருந்துநான் எவ்வளவு கஷ்டப்பட்டேன் தெரியுமா? உன்னை விட்டால் எனக்கு இந்த உலகத்தில் கதி வேறுயார்? நீ என்னைச் சோதிக்கலாமா? இனிமேல் நீ என்னை விட்டு விட்டுப் போய்விடாதே...." என்றாள்.

"இல்லை—இல்லை. நான் இனிமேல் இந்த வீட்டை விட்டுப் போகவே மாட்டேன், பெரியம்மா. நான் இங்கேயே இருக்கிறேன்" என்றான் விஜயரங்கத்தின் வேஷத்தில் இருந்த சொக்கன்.

அவன் அப்பொழுது பார்வதியின் அணைப்பில் இருந்தாலும் நிர்மலாவின் முகத்தைத்தான் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் குறும்பாகச் சிரித்துக்கொண்டே கண்களைச் சிமிட்டினாள்.

பாவம்! அப்பொழுது அந்தக் கண் பார்வையின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டு அதற்கு அடங்கித்தான் அவன் நடக்கவேண்டி யிருந்தது.

நிர்மலா மெதுவாகப் பார்வதியை நெருங்கி அவளுடைய கைகளைப் பிடித்துக்கொண்டு, "நீங்கள் உட்காருங்கள். சந்தோஷமான செய்தியாய் இருந்தாலும் திடீரென்று கேட்டதால் உங்கள் உடம்பு ஆடிவிட்டது. நான் மிகவும் ஜாக்கிரதையாக இதை உங்களுக்குச் சொல்லி இருக்க வேண்டும். எனக்கேற்பட்ட மகிழ்ச்சியில் நான் அவசரப்பட்டுக் கொண்டு உங்களிடம் சொல்லி விட்டேன்........" என்று கூறிக் கொண்டே அவளை அங்கிருந்த நாற்காலியில் உட்கார வைத்தாள்.

பார்வதியம்மாள் நாற்காலியில் அமர்ந்த பின்பும் சொக்கனின் கையை விடவில்லை. அவளுடைய ஒளி யிழந்த கண்களினால் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். (தொடரும்)

யோக சிகிச்சை

# டி.பி. அல்லது க்ஷயம்

சுந்தரம்

## 2. விதியும் மதியும்

**டி. பி.** பூச்சிக்குத் தாத்தா, முத்தாத்தா, ஆதி முதலவர் எப்பொழுது உதித்தார் என்று கண்டு பிடிக்க இயலாது. பண்டைக் காலத்திலும் டி. பி. இருந்திருக்க வேண்டும். வேறு பெயர் கொண்டு டி. பி. கொடுங்கோல் ஆட்சி புரிந்திருக்கலாம். இதை எவ்வாறு அக்காலத்தில் கட்டுப்படுத்தினர்? தற்காலம்போல் பெருவாரியாகக் கோர தாண்டவம் ஆடிற்று? இக்கேள்விகளுக்குச் சரித்திரம் விடை அளிக்கவில்லை. ஒன்று மட்டும் நிச்சயமாகக் கூறலாம். உழைப்பில்லாத இயற்கைக்கு விரோதமான வாழ்க்கையும், வறுமையும் மக்களின் பொது ஆரோக்கியத்தை அதிகமாக அக்காலத்தில் தாழ்த்தி இருக்காது. டி. பி. பூச்சி மனித குலத்துக்குள் குடி புகுந்ததும், புலனடிமை அற்ற வாழ்வின் பலமானது, இப்பூச்சிகளைக் கொன்றிருக்க வேண்டும். பண்டைக் கால வைத்திய சாஸ்திரங்களும், இதைப் பற்றிக் குறிப்புகள் கொடுத்துள்ளன.

மேல்நாட்டு மருத்துவ விஞ்ஞான உலகம் இந்த டி. பி. ஒரு விஷப் பூச்சியால் ஏற்படுவதென்று கண்டுபிடித்துள்ளது. இதைக் கொல்லும் முறையைச் சுமார் நூறு வருஷங்களாக ஆராய்ந்து வருகிறது. ஆராய்ச்சி, அபாயம் ஒன்றைத் தெரிவிக்கிறது. இது ஓர் அதிசயமான திருட்டு நோய்; ஆரம்பத்தில் விளங்காது; ஒரு மனிதனை நன்கு பிடித்துக் கொண்ட பிறகே உள் வெளிச் சின்னங்களால் விளங்கும்.

இரண்டாவதாக, இது ஒரு தொத்து நோய்! ''ஒட்டு நோயல்ல! எனவே ஓரளவு பரவாயில்லை!'' என்று மடமையில் அஜாக்கிரதையாக இருந்து விட்டால் அபாயத்துக்குள்ளாக்கும். ஒட்டு நோயெல்லாம் தொத்து நோய் அல்ல! ஆனால் டி. பி. யோ தொடாமலேயே தொத்திக் கொள்ளும். தொட்டாலோ களிப்புடன் ஒட்டிக் கொள்ளும்.

இந்த டி. பி. நோய்க் கிருமிகள் கண்களுக்குப் புலப்படாதவை. ஆகாயத்தில் உலாவிக் கொண்டிருப்பவை. இவை உலாவும் ஆகாயம் கறுத்தோ, வர்ணமாகவோ காணுமா என்றால், அவ்வாறு புறத்தில் கண்டு அறியக் கூடிய சின்னங்கள் எதையுமே, டி. பி. உலாவும் ஆகாயத்தில் காண முடியாது. உட்புகுந்தவுடன் வலி, ஜுரம், முறிப்பு, களைப்பு எதையாவது மனிதன் எச்சரிக்கையாவதற்கு வெளிப்படுத்தாது. உட்புகுந்த ஒன்று ஆயிரமாகவும், ஆயிரம் லட்சமாகவும், நாம் உண்ணும் ஹோட்டல் அன்னத்தின், ''கரகரா மொரு மொரு—கச்சடா!'' இவைகளின் உதவியால், குட்டி போட்டுத் தம் குடும்பத்துடன் பெரு வாழ்வைத் தொடங்கும்!

இந்தச் சமயத்திலாவது இது உள்ளே புத்ர — பௌத்ரர்களுடன் குடும்பம் நடத்துவதை அறிய முடியுமா? முடியாது! இவ்வாறு டி. பி. தன் வம்ச பரம்பரையைப் பெருக்கி, மானிட உயிரைத் தாக்க முழு ஆயுதபாணியாக, சமயத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கும். இதற்கென்ன சமயம் வேண்டும்? திருடனுக்கு வேண்டிய அதே சமயம் தான். வீட்டான் பலஹீனமாவது, எச்சரிக்கை—விழிப்பை இழப்பது என்ற சமயந்தான் தேவை. இதே மாதிரியாக, இந்தத் திருட்டு நோயான டி. பி. தான் உட்புகுந்த மனிதன் பலஹீனமாகவும், சுகாதார வாழ்க்கை என்றஎச்சரிக்கையிலிருந்து எப்பொழுது தவறுவான் என்றும் காத்துக்கொண்டிருக்கும்!

டி. பி. தொத்தியதையும் அறியாத, டி. பி. வளர்ந்ததையும் அறியாத வறுமைப் பாட்டாளியோ, சதை இழப்பார், பலம் இழப்பார், உற்சாகம் இழப்பார்! இவைகளுக்குத் துணையாக மார்பில் வலி, சுவாச நெருக்கடி, இருமல், கபம், ஜுரம்எல்லாம்படிப்படியாகக்கிளம்பும்.

எல்லா டி. பி. தாக்குதலும், இவ்வாறு படிப்படியாக வளர்ந்து, தன்னை அழிக்கும் முறைகளுக்கு இடம் தருவதில்லை. ''காலப்பிங் கன்சம்ப்ஷன்!'' என்பார் வைத்திய நிபுணர். பல்லாண்டுகளுக்கு முன் டி. பி. க்கு ''கன்சம்ப்ஷன்'' எனப் பெயரிட்



டிருந்தனர். ''கன்ஸ்யூம்!'' என்ற ஆங்கில மொழியில் பிறந்த இந்தப் பெயர் ''சாப்பிட்டு விடும்'' என்று பொருளைத் தருகிறது. இந்த நோயும், மனிதனைச் சாப்பிட்டு விடுகிறது; பணக்காரர், ஏழை என்ற வித்தியாசமின்றி இந்த நோய் தாக்கினாலும், தாக்கப்பட்ட தனவந்தனைக் காட்டிலும், தாக்கப்பட்ட ஏழை, டி. பி.க்குப் பலியாக அதிக சந்தர்ப்பம் உண்டு எனலாம்.

குழந்தைகளைத் தான் இது எளிதில் தாக்கி, அதிகம் கொல்லுகிறது. டி. பி. உட்புகக் குழந்தைகளிடம் தான் அதிக சமயம் உள்ளது. பெண்கள் தாக்கப்பட்டால் இருபதிலிருந்து முப்பது வயதுக்குள்ளாகத்தான் அதிக மரணத்தை டி. பி. உண்டாக்குகிறது. பருவம் வரும் ஆண்கள் இதற்கு அதிகமாக இரையாகின்றனர். தொழிலின் தன்மையும், டி. பி. தாக்க, பரவ, வதைக்கச் சமயங்களை அதிகரித்துத் தருகின்றது. தொழிற்சாலைகளின் நிலை, சீர்திருத்தம், வசதிகள் அதிகரிப்பு, பொது ஆரோக்கிய அதிகரிப்பு, உணவு வசதிகள்—இவைகளின் சீர்திருத்தம், வாசஸ்தல நிர்மாண முறை, இதன் வசதிகள், எல்லாம் டி.பி. நோயின் பெருவாரித் தன்மையை ஒடுக்கி, அதைச் சிறு பான்மையதாக மாற்றிக் கொடுப்பதற்கு உதவும்.

டி. பி. யே கொடியதா? — டி. பி. பெயரின் ''கிலி!'' கொடியதா என்றும் ஆராய வேண்டியிருக்கிறது. டி. பி. என்றதும், உடனே மனம் உடைந்து, உற்சாகம் குன்றி, நாலு மாதம் கழித்து, படுக்க வைக்கும் நிலை வருவதற்குப் பதிலாக, அன்றே படுக்கையில் நீட்டி விடுகிறது, 'டி. பி.'யின் கிலி!

'டி. பி'யின் கிலியை ஒழிக்க வேண்டுமென்று மேல் நாட்டு மருத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள். கிலி வேண்டாம் நேயர்களே! அறிவு வேண்டும்; யோக முயற்சி வேண்டும்; வெற்றி உமது! இங்கு எழுதப்படும் கட்டுரைகள் டி. பி. யை வெல்லும் முறைகளை அம்பலமாக்கி, ஒவ்வொருவரின் சிகிச்சையையும் அவரவர் திறமை கைகளுக்குள் தரும் கருத்துடையவை. விதி எப்படி இருந்தாலும், அதை மதியாலும், துதியாலும் பெரிதளவு மாற்றி வெல்ல முடியும்!

எதிரியின் இரகசியங்களை அறிதல், அவனை வெல்லப் பாதி முன்னேறியதாகும். டி. பி. நோய்தான் எதிரி இங்கு! உடலமைப்பு, நோயால் உடல் மாருட்டம், துணை உபாயங்கள், நோயைத் தடுக்கும் முறைகள், நேராகத் தாக்கும் ஆசன முறைகள், ப்ராணாயாமம், உணவு, ஒழுக்கம் எல்லாம் நன்றாக விவரிக்க அவசியம் ஏற்படுகின்றது. இவைகளைப் படிப்பதும், நன்றாக அறிந்து கொள்வதும் சிகிச்சையின் பெரிய பாகம் ஆகும்.

மேல் நாடுகளில் டி. பி. யின் தாக்குதலைப் பற்றி ஆராய்ச்சி செய்திருக்கின்றனர். முதல் யுத்தத்துக்கு முன்பு அங்கு இந்த நோய், 'ப்ளேக்' போல் பெருவாரி நிலையில் இருந்ததாகவும், அதற்குப் பிறகு தானாகவே படிப்படியாகக் குறைந்து விட்டதாகவும், இக்குறைவானது, மானிடத் தடுப்பு, சிகிச்சை முயற்சிகளால் ஏற்படவில்லை என்றும் கருதுகிறார்கள்.

சில தலைமுறைகளாக, சமூகத்தை டி. பி. நோய் தாக்கிவரவே, இயற்கைத் தூண்டுதலால், சந்ததிகளுக்கு இதைத் தடுக்கும் மறுப்புச் சக்தி உண்டாகிப் பெருகி விட்டது; நோயும், உடலும், போர் தொடுத்து ஒன்றையொன்று நசிப்பதில்லை என ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் நம் நாட்டிலோ டி.பி. வெல்லும் வழி இயற்கையாகவோ செயற்கையாகவோ ஏற்படவில்லை.

இந்த உடலின் தன்மையை ஆதாரமாக வைத்துக் கொண்டு சில தடுப்பு முறைகளைக் கையாளுகிறார்கள். சர்க்கார் ஆதரவில் இவை நடக்கின்றன. இது அறியாமையா, விஞ்ஞானமா என்பதை ஆராய வேண்டியிருக்கிறது. (தொடரும்)

# சாம்பியன்கள் மிகவும் விரும்புவது



ஓட்டப் பந்தயங்களில் பங்கெடுத்துக் கொள்பவர்களும் சோதனை பார்க்க விரும்பும் டிரைவர்களும் வெற்றிக்குத் தாங்கள் உபயோகிக்கும் எண்ணெயையே நம்பியிருக்கிறார்கள். அவர்கள் அத்தனை பேரும் ஒருமுகமாக காஸ்ட்ரால் எண்ணெயையே விரும்புகிறார்கள். 'வருஷத்துக்கு வருஷம் காஸ்ட்ராலுக்கு வெற்றிப் பாராட்டுகள் அதிகரித்துக் கொண்டே போகின்றன! ஆகவே உங்கள் இன்ஜினைப் பாதுகாக்கும் பொறுப்பையும், அது இன்னும் நல்ல முறையில் வேலை செய்ய வைக்கும் பொறுப்பையும் காஸ்ட்ராலிடம் ஒப்படையுங்கள்.




எண்ணெய்களுள் மிகச் சிறந்தது



**ஸி. ஸி. வேக்பீல்ட் & கம்பெனி, லிமிடெட்**

இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது

தேவியின் கடிதம்

# பேச்சுக் கலை

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

சில சமயம் பேசவே விஷயம் இருப்பதில்லை. விருந்தினர்கள் வந்தால் எதைப் பற்றிப் பேசுவதென்று யோசிக்க வேண்டியிருக்கிறது. பேசுவது ஒரு அரிய கலை. மேடைப் பேச்சுக்களைப் பற்றி நான் சொல்லவில்லை. அது வேறு விஷயம். சாதாரணமாக நம் குடும்பங்களில் ஒருவருக்கொருவர் பேசுவது, சிநேகிதர்களிடம் பேசுவது இவைகளையேதான் சொல்லுகிறேன்.

மௌனம் பல விதத்துக்கு நல்லதுதான். ஒரேயடியாக மௌனமாயிருப்பதைவிடப் பிறர் மனத்தைக் குளிரச் செய்யும் வகையில் பேசுவதுதான் அதைவிடச் சிறந்தது. மற்ற ஜீவராசிகளுக்குக் கிடைக்காத வரப் பிரசாதம் நமக்குக் கிடைத்திருப்பது பேச்சுத்தான். அதை உரிய முறையில் பயன்படுத்திக் கொள்வதுதான் சரியாகும்.

கல்யாண வீடுகளில் சிலர் அசந்தர்ப்பமாகப் பேசுவதைக் கேட்கிறோம். ஒரு வீட்டில் பிரபல பாடகர் கச்சேரி செய்து கொண்டிருந்தார். அந்தச் சமயம் முன் வரிசையில் உட்கார்ந்திருந்த சில சகோதரிகள் அன்று காலை விமான விபத்தில் நேர்ந்த உயிர்ச் சேதங்களைப் பற்றி விஸ்தரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று பாடகர் பாட்டையும் நிறுத்தி விட்டு, பக்க வாத்தியங்களையும் நிறுத்தி விட்டார். ஒரு நிமிஷத்தில் அந்த அம்மாளின் பேச்சு பந்தல் முழுவதும் கேட்டது. சங்கீதக் கச்சேரிகளில் பேசுவது மிகவும் கெட்ட வழக்கம். மேலும் கல்யாண வீட்டில் அசந்தர்ப்பமான பேச்சு மிகத் தவறுதானே.

* * * *

ஒரு அம்மாள் தம் பிள்ளைக்குப் பெண் பார்க்கப் போயிருந்தார். பெண் ஆரோக்கியமாக, அழகாக இருந்தாள். அந்த மகிழ்ச்சியில் என்ன பேசுவது என்று தெரியாமல், '' என் பெரிய நாட்டுப்பெண்ணும் கல்யாணத்தின்போது நன்றாக இருந்தாள். எங்கள் வீட்டுக்கு வந்தபிறகு நான் எவ்வளவு பார்த்துப் பார்த்துச் செய்தும் இளைத்துத் துரும்பாகி விட்டாள். எங்கள் வீட்டுச் சாப்பாட்டு ராசி போல் இருக்கிறது!'' என்று சொல்லி விட்டாள். பெண்ணின் பெற்றோர்கள் ஜாதகம் பொருந்தவில்லை என்று எழுதி விட்டார்கள். இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது?



நம்முடைய தவறு நமக்குத் தெரிவதில்லை. அதனால் கூடியமட்டும் பிறர் செய்கையைக் கவனமாகக் கவனித்தால் குற்றம் எளிதாகத் தெரியும். அத்துடனில்லாமல் நாமும் இக்குற்றங்களைச் செய்கிறோமா என்று அடிக்கடி நம்மையே ஆராய்ந்து கொண்டால் நல்ல பலன் இருக்கத்தான் செய்கிறது. தவறுகளைத் திருத்திக் கொள்ள முடிகிறது.

பல வருஷங்களுக்குப் பிறகு எங்கள் வீட்டுக்கு ஒரு உறவினர் குடும்பம் வந்திருந்தது. அந்த அம்மாளோ, கணவரோ தங்கியிருந்த மூன்று நாட்களிலும் எங்களைப் பற்றி ஒரு வார்த்தை விசாரிக்கவில்லை. மலேயா சுற்றுப் பிரயாணத்தையும் தங்களுடைய பெருமைகளையும், குழந்தைகளின் பிரதாபங்களையும் வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தார்கள். எனக்கு மிகவும் குறையாக இருந்தது. ஏன்? அழுகைகூட வந்து விட்டது. பிறரைப் பேச விடாமல் தாங்களே பேசும் சுபாவத்தை என்னவென்று சொல்வது?

இன்று பெண்களாகிய நாம் பல துறைகளில் வேகமாக முன்னேறிக் கொண்டு வருகிறோம். ஒருவர் மனம் நோகப் பேச வேண்டிய அவசியமில்லை. ஒவ்வொருவரிடமும் ஆண்டவனருளால் ஏதோ சில நற்குணங்கள், நற்செய்கைகள் இருக்கத்தானிருக்கும். சிலர் அபூர்வமான கைவேலைகள் செய்வார்கள், பாடுவார்கள், சமையல் சுவையாகச் செய்வார்கள். குழந்தைகளை நன்றாக வளர்த்திருப்பார்கள். அவற்றை மட்டும் குறிப்பிட்டுப் பேசுவோமே.

கஷ்டப்படும் மனத்துக்கு ஆறுதல் அன்பான பேச்சுத்தான். அவர்கள் கஷ்டத்தை ஓரளவு நம் மனத்தில் பதிய வைத்துக் கொண்டு ஆறுதல் சொல்வோமானால், அது சர்க்கரை பூசின வார்த்தைகளாகக் கூட இருக்காது; இதயத்தில் ஊறின அமுதமாக அவர்களுடைய மனப் புண்ணை ஆற்றும்.

இப்படிக்கு,
பூமாதேவி

# ரங்கசாமி நாயுடுவின்

இந்தக் காலத்தில் எத்தனையோ திறப்பு விழாக்கள் நடைபெறுகின்றன. திறப்பு விழாக்களைக் கணக்கிட முடியாது. வெற்றிலை பாக்குக் கடை வைப்பவர் யாரேனும் ஒரு பிரமுகரை அழைத்து முதல் தாம்பூலம் கொடுத்துத் திறப்பு விழா நடத்துகிறார். மருந்துக்கடைகள், மளிகைக் கடைகள், துணிக் கடைகள் எல்லாவற்றுக்கும் திறப்பு விழாக்கள் நடைபெறுகின்றன. அவரவர்களுக்கு அவரவர்களுடைய தொழில் முக்கியமானதுதான். ஆகையால் எல்லாவற்றுக்கும் திறப்பு விழாக்கள் நடைபெற வேண்டியதுதான்.

ஆனாலும் சென்ற ஆறும் தேதி கோயமுத்தூர் பீளமேட்டில் நடந்த திறப்பு விழாவைப் போன்ற சிறப்பான திருவிழாவை நான் பார்த்தது கிடையாது. அந்த ஊரில் ஒரு "இன்ஜினியரிங் காலேஜ்" கட்டி அதற்குத் திறப்பு விழா நடத்தினார்கள். அந்தக் கல்லூரிக்குக் கோயமுத்தூரின் பெயரையே வைத்தார்கள். "கோயமுத்தூர் தொழிற் நுணுக்கக் கல்லூரி"யின் திறப்பு விழாவுக்கு வந்தவர்கள் எல்லாரும் இந்தக் கல்லூரியை ஆரம்பித்த ஸ்ரீ வி. ரங்கசாமி நாயுடுவின் வள்ளன்மையை மனதாரப் பாராட்டினார்கள். இந்தக் கல்லூரிக்கு என்ன பெயர் சூட்டியிருந்தாலும் இது "ரங்கசாமி நாயுடுவின் தொழிற் நுணுக்கக் கல்லூரி"யேதான் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

** ** **

ஓர் ஊருக்குப் பெயரும் புகழும் பல காரணங்களால் ஏற்படக் கூடும். ஆனால் கல்வி ஸ்தாபனங்களின் மூலம் ஏற்படும் புகழ்தான் என்றும் அழியாமல் நிலைத்து நிற்கும். இங்கிலாந்தில் முக்கிய நகரமான லண்டனைக் காட்டிலும் ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் நகரங்களின் புகழ்தான் பிரபலமடைந்திருக்கின்றன. இதற்குக் காரணம் அந்த நகரங்களில் உள்ள புகழ் பெற்ற கல்வி ஸ்தாபனங்களே.

புராதன பாரத நாட்டில் புகழ் பெற்ற தக்ஷசிலம், நாலந்தா என்னும் ஊர்களில் தான் மிகச் சிறந்த கல்வி நிலையங்கள் இருந்தன. தமிழகத்தில் கல்வித் துறையில் மதுரைக்கும் காஞ்சிக்கும் உள்ள புகழைப் பற்றி அதிகமாகக் கூற வேண்டியதில்லை.

மேற்கூறிய நகரங்களைப் போலவே கோயமுத்தூர் நகரமும் புகழ் அடையப் போகிறது என்று கூறினால் அது மிகையாகாது.

அத்தகைய சிறப்பை அந்த ஊருக்கு அளிக்கும் தொழிற் கல்வி நிலையங்கள் ஏற்கனவே இரண்டு ஆரம்பித்து நல்ல முறையில் நடந்து வருகின்றன. இப்போது ஆகஸ்டு ஆறும் தேதி "கோயமுத்தூர் இன்ஸ்டிடியூட் ஆப் டெக்னலஜி" என்ற பெயரில் ஒரு புதிய தொழிற் கல்லூரியையும் ஆரம்பித்திருக்கிறார்கள்.

** ** **

கோயமுத்தூர் தொழில் நுணுக்கக் கல்லூரியின் பிரின்ஸ்பால் ஸ்ரீ பி. ஆர். ராமகிருஷ்ணன் M. Sc. (M. I. T.) அவர்கள் கோவையில் சிறந்த முறையில் நடைபெற்று வரும் "நவ இந்தியா" என்னும் தினப் பத்திரிகையின் ஆசிரியர். மேல் நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்து மிகுந்த அநுபவம் பெற்றவர். சோஷலிஸ சமுதாய அடிப்படையில் இந்தியா முன்னேற வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர். அதற்கு வேண்டிய உதவிகளை எல்லாம் செய்ய வேண்டும் என்ற உயரிய

**1. கோயமுத்தூர் தொழிற் நுணுக்கக் கல்லூரியின் மாணவர்களை இந்திய சர்க்கார் தொழில் மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களுக்கு அறிமுகம் செய்கின்றனர். ஸ்ரீ டி. டி. கே. மாணவர்களைக் கைகுலுக்கி உற்சாக மூட்டுகிறார். 2. கல்வி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிர**



# தொழிற் கல்லூரி



**பகீரதன்**

நோக்கத்துடன்தான் இந்தப் புதிய கல்லூரியின் பிரின்ஸிபால் பதவியை ஏற்றுக்கொண்டிருக்கிறார். தொழில் நுணுக்கக் கல்லூரியின் பிரின்ஸிபாலுக்கு கிராக்கி அதிகம் ஆயிற்றே! யாராவது அதிக சம்பளம் கொடுத்துக் கூப்பிட்டால் இந்தக் கல்லூரியை விட்டுப் போய் விடுவாரோ என்று கவலைப்பட வேண்டியதில்லை. காரணம் இந்தத் தொழிற் நுணுக்கக் கல்லூரியின் ஸ்தாபகர் ஸ்ரீ வி. ரங்கசாமி நாயுடுவின் குமாரர்களில் இளையவர்தான் பிரின்ஸிபால் ஸ்ரீ பி. ஆர். ராமகிருஷ்ணன்.

தொழிற் கல்லூரியின் கரஸ்பாண்டெண்ட் ஸ்ரீ வெங்கடசாமி அவர்கள் பிரின்ஸிபாலைவிட இன்னும் ஒரு படி முற்போக்குள்ளவர். அவருடைய முயற்சிதான் இந்தத் தொழிற் கல்லூரியின் தோற்றத்துக்குக் காரணம். தொழிற் கல்லூரி ஏற்பட்டே தீர வேண்டும் என்று ஒற்றைக் காலில் நின்று பாடுபட்டவர். தம் சுதந்திர நாட்டுக்குத் தேவையாக இருக்கும் தொழில் நிபுணர்களின் அருமையை உணர்ந்தவர். தென் இந்திய மில் அதிபர் சங்கத்தின் தலைவராக இருந்து சிறந்த முறையில் பணியாற்றி வருகிறவர். இவர் ஸ்ரீ வி. ரங்கசாமி நாயுடுவின் மூத்த புதல்வர்.

ஆகையால் கரஸ்பாண்டெண்டும், பிரின்ஸ்பாலுமே கோயமுத்தூர் தொழிற் கல்லூரியின் நிர்வாகிகளாகவும் சொந்தக்காரர்களாகவும் இருக்கும்பொழுது கல்லூரியின் வளர்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்?

ஸ்ரீ வி. ரங்கசாமி நாயுடு தொழிற் கல்லூரிக்காக அளித்திருக்கும் கணக்கற்ற செல்வத்துடன் தமது புதல்வர்களையும் தொழிற்கல்விப் பணிக்கே அர்ப்பணித்து விட்டிருக்கிறார்.

**"மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை என்னோற்றான் கொல் என்னும்சொல்!"**

என்ற தெய்வ வள்ளுவரின் திருவாக்கை இன்று காரியத்தில் நிறைவேற்றி வருகிறார்கள் திரு பி. ஆர். ராமகிருஷ்ணன் அவர்களும், திரு ஆர். வெங்கடசாமி அவர்களும்.

கோயமுத்தூருக்குச் செல்லும்போதெல்லாம் ஸ்ரீ வி. ரங்கசாமி நாயுடுவின் குடும்பத்தினரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் திரு வி. ரங்கசாமி நாயுடு அவர்களை மட்டும் நேரில் சந்திக்கும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டதில்லை. தொழிலுக்கும் தொழில் நிபுணர்கள் வளர்ச்சிக்கும் பெருமதிப்பு வைத்து, லட்சக்கணக்கான ரூபாய்களை அள்ளிக் கொடுத்துப் புதிய முறையில் தொழிற் கல்லூரி ஆரம்பித்து நடத்த வேண்டும் என்று ஆவல் உள்ள புண்ணியவான் ஒருத்தர் தமிழ்நாட்டில் இருக்கிறாரே, அவரைப் பார்க்காமல் இருக்கிறோமே என்ற ஆவலினாலேயே கோயமுத்தூர் தொழில் நுணுக்கக் கல்லூரித் திறப்பு விழாவுக்குச் சென்றேன். அடக்கமே உருவாக இருந்த ஸ்ரீ வி. ரங்கசாமி நாயுடு அவர்களைப் பார்த்தவுடன் "இவரா" இப்பேர்ப்பட்ட தர்மத்தைச் செய்திருக்கிறார்?" என்று எண்ணி ஒரு கணம் வியக்கத்தான் வேண்டியிருந்தது.

ஸ்ரீ ரங்கசாமி நாயுடு தேசத்திலும் தேச வளர்ச்சியிலும் அளவற்ற பக்தி கொண்டவர்.

---

**மணியம் தலைமையுரை நிகழ்த்துகிறார். 3. கல்லூரித் துவக்க விழாவுக்கு உற்சாகத்துடன் வந்து குழுமியிருந்த கோவை ஜில்லா பிரமுகர்களில் ஒரு பகுதி. 4. பிரின்ஸ்பால் ஸ்ரீ பி. ஆர். ராமகிருஷ்ணன் கல்லூரி தோன்றிய வரலாற்றைக் கூறி வரவேற்புரை நிகழ்த்துகிறார்.**



அடுத்தபடியாக இந்து தர்மத்தில் அவருக்கு அபார பக்தி உண்டு. அவர் தம்முடைய சொந்த முயற்சியில் பல நெசவு ஆலைகளைத் திறம்பட நடத்தி வருகிறார். இன்னும் சில தொழிற்சாலைகளையும் நடத்தி வருகிறார். தம்முடைய தொழிற்சாலைகளில் செய்த இயந்திரங்களைக்கொண்டே ஒரு நெசவு ஆலையையும் கட்டி யிருக்கிறார். தேசத்தில் தொழில் வளம் பெருகுவதற்கு எவ்வளவு உற்சாகமாகவும் திறமையாகவும் காரியங்கள் செய்யலாமோ அப்படிச் செய்துகொண்டு வருபவர். ''கோயமுத்தூர் தொழில் நுணுக்கக் கல்லூரி'' அவருடைய திறமைக்கு ஒரு சிகரம் போன்றது.



திரு வி. ரங்கசாமி நாயுடு

தொழிற் கல்லூரி ஆரம்பித்ததின் மூலம் இந்த நாட்டில் யாருமே சாதிக்க முடியாத காரியத்தைச் சாதித்திருக்கிறார். சுமார் பதினெட்டு மாதங்களுக்கு முன் இந்த மாதிரி ஒரு தொழிற் கல்லூரி ஆரம்பிக்க வேண்டும் என்று தம் குடும்பத்தினருடன் திட்டமிட்டார். பிடிவாதத்துக்குப் பெயர் போன சென்னை சர்வ கலாசாலையைப் பிடித்து அதன் சம்மதத்தையும் பெற்றார். தொழிற் கல்லூரி ஆரம்பிப்பதற்காக ஐம்பது லட்சம் ரூபாய் பணம் ஒதுக்குவதற்கு ஏற்பாடு செய்தார். இந்து தர்மத்தில் அவருக்குள்ள பற்றுதல் காரணமாகத் தம் பெயரைத் தொழிற் கல்லூரிக்குச் சூட்டாமல் தம்முடைய ஊரின் பெயரையே சூட்டினார். பத்து வாரங்களுக்குள் மிகப் பெரிய கல்லூரிக் கட்டடத்தையே கட்டிக் கல்லூரியின் திறப்பு விழாவையும் அமோகமாக நடத்தி விட்டார்.

கட்டடக் கலையில் இயற்கையான ஆர்வமும் நுண்ணறிவும் படைத்த ஸ்ரீ ரங்கசாமி நாயுடு குடும்பத்தார் இன்னும் இரண்டு ஆண்டுகளுக்குள் கம்பீரமான இன்னும் பல கல்லூரிக் கட்டடங்களைக் கட்டி விடுவார்கள். பீளமேட்டின் தோற்றமே மாறிப் புதிய சோபையுடன் விளங்கப் போகிறது என்பதில் ஐயமில்லை.

விழாவுக்குக் குறிப்பிட்டிருந்த நேரத்துக்கு ஒரு மணி முன்னதாகவே கல்லூரிக்குப் போய் விட்டேன். திறப்பு விழாவில் கலந்து கொள்வதைக் காட்டிலும், புதிய தொழில் நுணுக்கக் கல்லூரியைப் பார்த்து அதன் நடைமுறைகளை அறிந்து கொள்ளும் ஆர்வமே எனக்கு அதிகமா யிருந்தது.

கல்லூரிக் கட்டடத்துக்குள் பிரவேசிக்கும் போதே ஒரு புதிய உற்சாகமான கலைக் கோயிலுக்குள் பிரவேசிக்கிறோம் என்ற உணர்ச்சி உண்டாயிற்று. பள்ளியின் பிரதான வாசலில் பாரத மணிக் கொடி ஏறிப் பறக்கும் கம்பம் கம்பீரமாக நின்று கொண் டிருந்தது. அதைச் சுற்றிலும் கல்லூரி மாணவர்கள் வட்ட வடிவமாக நின்றுகொண் டிருந்தார்கள். அவ்விதம் நின்ற பிள்ளைகளின் ஆஜானுபாகுவான தோற்றம் மகிழ்ச்சி தருவதா யிருந்தது. காஷ்மீரத்திலிருந்து கன்யா குமரி வரையில் உள்ள எல்லா ராஜ்யத்து மாணவர்களும் இந்தப் புதிய இன்ஜினியரிங் கல்லூரியில் சேர்ந்திருக்கிறார்கள் என்று அறிந்தேன். இந்தியாவில் உள்ள எல்லா மாகாணத்தைச் சேர்ந்தவர்களும் வட்ட வடிவமாக நின்று தேசியக் கொடிக்கு மரியாதை செய்வது இந்தியாவே அங்கு வந்து நின்று மரியாதை செய்வது போலிருந்தது.

மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் பாரத மணிக் கொடியை ஏற்றிப் பறக்க விட்டதும் கல்லூரி மாணவர்கள் வீரர்கள்போல் நிமிர்ந்து நின்று கொடி வணக்கம் செய்தார்கள். இந்தக் காட்சியைப் பார்த்ததும் எனக்குப் பாரதியார் பாடிய பாரத நாட்டுக் கொடியின் பாடல் நினைவுக்கு வந்தது.

மகா கவியின் வாக்கு பரிபூரணமாகப் பலித்திருப்பதை அன்றைய தினம் நேருக்கு நேர் பார்த்து ஆச்சரியம் அடைந்தேன்.

சுமார் ஐம்பது ஏக்கர் நிலப்பரப்பில் புதிதாகப் பூமியில் இருந்து முளைத்து வந்ததோ என்று எல்லாரும் வியந்து கொண்டிருந்த கல்லூரியின் புதுக் கட்டடத்துக்குள் நுழைந்தேன். உள்ளே கல்லூரியின் இதர கட்டடங்கள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகக் கண் முன்னால் காட்சியளித்தன. நிர்வாகப் பிரிவுக் கட்டடம், கல்லூரி மண்டபங்கள், லாபரட்

1. விவசாய மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் கல்லூரிக்கு ஆசி கூறுகிறார்.
2. புதிதாகக் கட்ட விருக்கும் கல்லூரியின் பிரதான கட்டடத்தின் தோற்றம்.
3. கல்லூரி கரஸ்பான்டெண்ட் ஸ்ரீ ஆர். வெங்கடசாமி நன்றி கூறுகிறார்.








# ஸாரிடான்
## உபயோகித்து
## வலியை ஒழியுங்கள்

தலைவலி, பல்வலி, முதுகுவலி, தசைவலி மற்றும் சாதாரண உபாதைகளிலிருந்து துரித நிவாரணம் பெற, வலியைப் போக்குவதில் உலகப் பிரசித்தி பெற்ற ஸாரிடான் உபயோகியுங்கள். அது மூன்று விதங்களில் வேலை செய்கிறது:

**நிவாரணமளிக்கிறது:** எல்லாவித வலிகளிலிருந்தும் ஸாரிடான் உங்களுக்கு துரித நிவாரணம் அளிக்கிறது. அது உங்களுக்கு வயிற்றுக் கோளாறு விளைவிக்கவோ, அல்லது மனச் சோர்வு உண்டாக்கவோ செய்யாது.

**விச்ராந்தி அளிக்கிறது:** ஸாரிடான் உங்கள் நரம்புகளுக்கு சமனமூட்டி, வலியினால் ஏற்படும் சங்கட உணர்ச்சியை நீக்கி, உங்களை உற்சாகத்துடனும், விச்ராந்தியுடனும் வைக்கும்.

**தெம்பூட்டுகிறது:** தூக்கமின்மை, அதிகவலி இவைகளால் ஏற்படும் உடல மற்றும் மனத் தளர்ச்சியை சமாளிக்க அவசியமான தெம்பை ஸாரிடான் உங்களுக்கு அளிக்கிறது. உட்கொண்ட சிறிது நேரத்தில் சுகமும் புத்துணர்ச்சியும் பெறுவீர்கள்.

ஸாரிடானின் சேர்க்கைப் பொருள்கள் ஒருங்கே இணைந்து வேலை செய்வதால் அவைகளின் தனித்தனி குணங்கள் அதிகரிக்கின்றன. ஸாரிடானில் போதையூட்டும் மருந்துகள் ஒன்றும் சேர்க்கப்படுவதில்லை.

* ஒரு மாத்திரை 2 அணா
* ஒவ்வொரு வில்லையும் ஒரு பூர்த்தியான டோஸ்
* ஆஸ்பிரின் (அஸெட்டில்-ஸாலிஸிலிக் ஆஸிட்) சேர்வில்லை



**ஸாரிடான்** உபயோகித்து பலனை அனுபவத்தில் காணுங்கள்!

VT. 3105

டரி, நூல்நிலையம், டிராயிங்ஹால், ஒர்க்ஷாப், மாணவர் விடுதி, கல்வி நிலைய உத்தியோகஸ்தர்களின் வீடுகள் எல்லாம் காட்சி யளித்தன.

ஆமாம்! காட்சிப் பொருளாகத்தான் காட்சி அளித்தன. கல்லூரியின் புதிய கட்டடத்துச் சுவர்களில் மேற்கூறிய கட்டடங்களின் முழுத் தோற்றங்களும் வரையப் பெற்றிருந்தன. இன்று சுவர்ச் சித்திரங்களாகத் தெரியும் இந்தக் கட்டடங்கள் இன்னும் சில ஆண்டுகளில் கல்லும் சுண்ணாம்பும் கொண்டு கட்டிய மாபெருங் கட்டடங்களாகத் திகழும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

** ** **

திறப்பு விழாக் கூட்டம் ஆரம்பமானதும் மேடையிலிருந்து சபையைப் பார்த்தபோது அப்படியே ஆச்சரியத்தால் மூக்கில் விரல் வைக்கும்படி இருந்தது. சபையில் குதூகலத்துடன் கூடியிருந்த கல்லூரி மாணவர்களையும், கோயமுத்தூர் நகரத் தொழிலதிபர்களையும், கோவை ஜில்லா பிரமுகர்களையும், அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த பெண்மணிகளையும் பார்த்தபோது ''தொழிற் கல்லூரித் திறப்பு விழாவோ இது?'' என்று ஆச்சரியப்படத்தான் வேண்டியிருந்தது! அந்த மாபெருங் கூட்டம், ஸ்ரீ வி. ரங்கசாமி நாயுடு குடும்பத்தார் அந்த மக்களின் அபிமானத்தை எவ்வளவு தூரம் பெற்றிருக்கிறார்கள் என்பதற்கு அத்தாட்சியாக இருந்தது.

பிரின்ஸிபால் ஸ்ரீ பி. ஆர். ராமகிருஷ்ணன் பொங்கி வரும் உற்சாகத்துக்கிடையே நீண்ட வரவேற்புரை கூறினார். பின்னர் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் தலைமையுரை நிகழ்த்தினார்.

''நான் இந்த ராஜ்யத்தின் கல்வி மந்திரியாகவும், கோவை வாசியாகவும் இருப்பதால் கோவை நகரில் ஏற்கனவே இரண்டு தொழிற் கல்லூரிகள் இருக்கும் பொழுது மூன்றாவது கல்லூரியைத் திறந்து வைப்பதற்கு அனுமதி அளித்ததாக யாரும் நினைக்க வேண்டாம். சர்க்கார் வேறு, சென்னை சர்வகலாசாலை வேறு. சென்னை சர்வ கலாசாலைதான் கல்லூரிகள் திறப்பதற்கு 'உத்தரவு கொடுக்க வேண்டும். ஆனாலும் கோயமுத்தூர் தொழில் நகரம். இங்கு இரண்டு தொழில் கல்லூரிகளுக்கு மேல் மூன்றாவதாக இன்னொரு கல்லூரி இருப்பது நல்லதுதான். இப்பொழுது நமது நாட்டுக்கு வேண்டிய இன்ஜினியர்களை நினைக்கும்போது இன்னும் பல இன்ஜினியரிங் கல்லூரிகள் நம்முடைய சென்னை ராஜ்யத்தில் திறக்க வேண்டும்'' என்றார்.

''ஆமாம். தொழிற் கல்லூரிகள் வளர வேண்டியதுதான். பற்றாக்குறையாக இன்ஜினியர்கள் இருந்தால் திறமையான இன்ஜினியர்கள் எப்படிக் கிடைப்பார்கள்? ஒரு டம்ளர் தண்ணீர் வேண்டுமானாலும் டம்ளரையா கட்டிக் கிணற்றுக்குள் விடுகிறார்கள்? சொம்பையோ குடத்தையோ அல்லவா கட்டி விடுகிறார்கள்? அதுபோல் தேவைக்கு மேல்தான் இன்ஜினியர்கள் வேண்டும். அதற்கு இன்னும் பல இன்ஜினியரிங் கல்லூரிகள் இந்த நாட்டில் தோன்றத்தான் வேண்டும். அது கோவையில் உண்டானால் என்ன? தஞ்சையில் உண்டானால் என்ன? எல்லாம் ஒன்றுதான்'' என்று என் அருகில் இருந்தவர் முணுமுணுத்தார். இதைக் கேட்டுக்கொண்டிருக்கும்போதே இந்திய சர்க்கார் தொழில் மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் தம் திறப்புரையை நிகழ்த்த ஆரம்பித்துவிட்டார்.

சர்க்காரின் சிவப்பு நாடா முறையையும், புள்ளி விவரங்களைக் கொண்டு நல்ல காரியங்களைத் தடை செய்யும் தவறையும் எடுத்துக் காட்டி இடித்துக் கூறினார். பத்து வாரங்களுக்குள் இதுபோன்ற அற்புதமான கட்டடத்தைத் தனி மனிதர்கள்தான் கட்ட முடியும். சர்க்கார் செய்திருந்தால் இன்னும் திட்டங்களை தயாரித்திருக்க மாட்டார்கள் என்றார். கோவையில் மூன்று இன்ஜினியரிங் கல்லூரிகள் இருப்பதால் ஒரு இன்ஜினியரிங் சர்வகலாசாலை ஆரம்பிக்க யோசனை கூறினார். கூடவே மருத்துவக் கல்லூரி ஒன்றையும் ஆரம்பிக்க இன்னும் யாராவது செல்வந்தர்கள் முன்வர வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

இவ்வாறு ஸ்ரீ டி. டி. கே. கூறியதும் அங்கு கூடியிருந்த ஆயிரக்கணக்கான மக்கள் கரகோஷம் செய்து அதை வரவேற்றார்கள். இந்த நிகழ்ச்சியைப் பார்த்தபோதே கோயமுத்தூரில் விரைவில் இன்ஜினியரிங் சர்வகலாசாலை ஏற்பட்டுவிடும் என்றே எண்ணினேன், அதற்கேற்றாற்போல் இன்ஜினியரிங் சர்வகலாசாலை ஒன்றைக் கோயமுத்தூரில் ஆரம்பிப்பதற்குக் கோவை நகரப் பிரமுகர்கள் முயன்று வருகிறார்கள் என்பதைச் சில தினங்களுக்கு முன்னால் பத்திரிகையில் படித்தபோது மகிழ்ச்சி அடைந்தேன்.

பின்னர் மந்திரி கனம் பக்தவத்சலம் ஸ்ரீ வி. ரங்கசாமி நாயுடு தம்முடைய பெயரைக் கூடத் தாம் ஆரம்பித்த கல்லூரிக்குச் சூட்டாமல் இருந்த பெருந்தன்மையைப் பாராட்டி, கல்லூரிக்கு வாழ்த்துக் கூறினார்.

கடைசியில் கோவை தொழில் நுணுக்கக் கல்லூரியின் கரஸ்பாண்டெண்ட் ஸ்ரீ ஆர். வெங்கடசாமி அவர்கள் எல்லாருக்கும் நன்றி கூறத் துவக்க விழா இனிது முடிந்தது.

** ** **

ஸ்ரீ வி. ரங்கசாமி நாயுடு குடும்பத்தினர் கோவை தொழில் நுணுக்கக் கல்லூரித் துவக்க விழாவை மாகாண முக்கிய திருவிழாவாகவே நடத்தி விட்டார்கள். நமது பண்பாட்டுச் சிறப்புடன் அமைந்த விழா முறைகள் எல்லாம் பிரமாதமாக இருந்தன.

கோயமுத்தூர்க்காரர்கள் கெட்டிக்காரர்கள். எடுத்த காரியம் எல்லாவற்றிலுமே வெற்றி பெறக் கூடிய ஆற்றல் படைத்தவர்கள். ஆகவே கோவையில் இன்ஜினியரிங் சர்வகலாசாலை ஏற்படுத்துவதிலும் வெற்றி யடைவார்கள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

கோவை பீளமேட்டில் நடை பெற்ற தொழிற் கல்லூரித் துவக்க விழா தமிழ்நாட்டின் ''தொழிற் கல்லூரி'' வளர்ச்சிக்கு ஆரம்ப விழா வென்றே வைத்துக் கொள்ளலாம். தமிழ் நாட்டில் உள்ள ஒவ்வொரு ஜில்லாவிலும் இன்னும் சில ஆண்டுகளில் புதிய தொழிற் கல்லூரிகள் திறப்பதற்கு அந்தந்த ஊரில் உள்ள பிரமுகர்களும் பொது மக்களும் பாடுபட வேண்டும். அவ்வாறு செய்வதற்கு ஸ்ரீ ரங்கசாமி நாயுடுவின் தொழிற் கல்லூரி சிறந்த வழிகாட்டியாகத் திகழட்டும்.

# வட்ட மேஜை

## விணைத் திணிப்பானேன்?

சமீபத்தில் மதுரையில், முனிசிபாலிடியை மாற்றிக் கார்ப்பொரேஷனாகச் செய்வதற்கான மசோதா ஒன்று தயாரிக்கப்பட்டு வருவதாகப் பத்திரிகை மூலம் அறிகிறேன். தற்சமயம் மதுரைவாசிகள் பல வழிகளில் முனிசிபாலிடிக்கு வரி செலுத்த வேண்டியிருக்கிறது. இப்பொழுதே பொது மக்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்நகரில் சொந்த வீடு வைத்திருப்பவர்களைவிட, குடியிருப்பவர்களே அதிகம். ஒரு வீட்டில் குடியிருப்பவர்கள் அநேகமாக மத்தியதர வகுப்பினராகவே இருக்கின்றனர். கார்ப்பொரேஷன் ஆக்கப்பட்டால் வீட்டு வரி இருமடங்காகி விடும். வீட்டுச் சொந்தக்காரர்கள் அந்த அதிகப்படி வரியை எங்களைப் போன்றவர்களிடமிருந்தே வசூலிக்க முற்படுவார்கள். ஒரு சமயம் சென்னை மந்திரி ஒருவர் மதுரைக்கு விஜயம் செய்தபோது, ''ஒரு சிலருக்கு மேயர் பதவி கிடைக்கும் என்ற விருப்பத்துக்காகக் கார்ப்பொரேஷன் வேண்டும் என்று விரும்பாதீர்கள். இப்பொழுதே வரிச்சுமை அதிகமாக இருக்கிறது. கார்ப்பொரேஷனாக மாறிவிட்டால், இன்னும் பல வரிகள் கொடுக்கப்பட வேண்டியிருக்கும். இதனால் உங்களுக்குத்தான் கஷ்டம்'' என்று கூறினார். இத்தனை கஷ்டங்கள் இருப்பதை நன்றாக அறிந்தும் மதுரை மக்கள் மீது அந்தக் கார்ப்பொரேஷனைத் திணிப்பானேன்?

மதுரை
8—8—56

ரா. கிருஷ்ணமூர்த்தி
(மதுரைக் கல்லூரி)

★

## தொழிற் சங்கங்கள்

ஜூலை மாதம் 29-ந் தேதி இதழில், ''என்ன சேதி'' என்ற தலைப்பில் ரயில்வே தொழிலாளர்களிடையே இயங்க வேண்டிய ஒற்றுமையைப் பற்றி எழுதியுள்ளீர்கள்.

பல்வேறு தொழிலாளர்களின் சங்கங்கள் ஐக்கியத்தைப் பற்றிச் சிந்திக்குமுன், ஒரே தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக்கென, பல்வேறு சங்கங்கள் தோன்றுவதின் காரணங்களை ஆராய்வது அத்தியாவசியம்.

எங்காவது ஒரு தொழிலாளர் ஊர்வலமோ பொதுக் கூட்டமோ நடந்தால் அங்கு நாம் முதலில் காண்பது யாது? ஏதாவது ஒரு அரசியல் கட்சியின் கொடி, ஏதாவது ஓர் அரசியல் தலைவருக்கு 'வாழ்க கோஷம்'. இவைதான். தொழிலாளர்களின் நலமோ, மற்றப் பிரச்னைகளோ அங்கு முக்கிய கவனத்தைப் பெறுவதில்லை.

மேலும் ஒரே தொழிலில் ஈடுபட்டுள்ள பல விதச் சங்கங்களின் அங்கத்தினர்களுக்குள் வாய்ச்சண்டை, கைச்சண்டை, கத்திக்குத்து, கொலை முதலியவையும் இப்பொழுது அன்றாட நிகழ்ச்சிகளாய் விட்டன.

இவ்விதம் விரும்பத் தகாத நிகழ்ச்சிகள் நடைபெறுவதற்கு அடிப்படைக் காரணம் யாது? தொழிலாளர் நலனுக்காக முதலைக் கண்ணீர் வடித்துக் கொண்டு, பசுத்தோல் போர்த்திய புலிகளாக நடமாடிக் கொண்டிருக்கும், விரும்பத் தகாத ஒரு சில அரசியல் வாதிகளின் சூழ்ச்சியே.

இவர்கள் தொழிற் சங்கங்களில் புகுந்து அங்குள்ள தங்கள் அரசியல் சீடர்கள், கைக் கூலிகள் ஆகியவர்களின் உதவியைக் கொண்டு, தலைமைப் பதவியைக் கைப்பற்றுவதாகும்.

மேலும் அவர்கள் தங்களது தலைமைப் பதவி என்றும் நீடித்திருக்கும் பொருட்டுத் தொழிலாளர்களிடையே எப்பொழுதும் மனக் கசப்பும், அமைதியின்மையும் நிலவியிருப்பதற்கான வழிவகைகளைத் தொடர்ந்து செய்து கொண்டேயிருக்கிறார்கள்.

இத்தகைய தலைவர்களைக் கொண்ட தொழிற் சங்கங்களில் நேர்மையும் நியாய புத்தியும் உடையவர்கள் அங்கத்தினர்களாகப் பங்கு



ரோடு போக்குவரத்துக் கழகம் சென்னைக் கிளையை ஆகஸ்ட் மூன்றாந் தேதி விவசாய மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் ஆரம்பித்து வைத்தார். விழாவுக்கு நகரில் உள்ள போக்குவரத்து ஸ்தாபன அதிபர்கள், மோட்டார் தொழில் அதிபர்கள் பலர் வந்திருந்தனர். காரியதரிசி ஸ்ரீ டி. வி. ராமானுஜம் அனைவரையும் வரவேற்றார். போக்குவரத்து இன்ஜினியர் ஸ்ரீ என். பாலகிருஷ்ணன் வந்தனோபசாரம் கூறினார். மேலே கழகக் காரியதரிசி ஸ்ரீ டி. வி. ராமானுஜம் வரவேற்புரை நிகழ்த்துவதையும், மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம், சிம்ஸன் கம்பெனி அதிபர் ஸ்ரீ அனந்தராம கிருஷ்ணன் முதலியவர்கள் அமர்ந்திருப்பதையும் காணலாம்.

எடுத்துக் கொண்டு தொண்டாற்றுவது இயலாததாகி விடுகிறது.

இங்கிலாந்து முதலிய முதலாளித்துவ நாடுகளில் கூடத் தொழிற் சங்கங்கள் விரும்பத் தகாத அரசியல் வாதிகளின் தொடர்புகளை அறவே அகற்றியுள்ள ஒரே காரணத்தால் அங்கு தொழிற் கட்சிகள் நாட்டையே ஆளும்படியான பலத்த சக்தியைப் பெற்றிருக்கின்றன. ஆனால் நம் நாட்டிலோ தொழிலாளர்கள் எண்ணிக்கையும், பலமும், பலமடங்கு அதிகமிருப்பினும் நேர்மையான தொழிற்சங்க அலுவல்கள் நடைமுறையில் இல்லாமையால் தொழிலாளர்களது சக்தி சிதறிப்போய்ச் சக்தியற்றதாக இருக்கிறது.

இந்த நிலைமை மேலும் நீடிக்காமல் செய்வதற்கு இந்தியத் தொழிற் சங்க சரித்திரத்திலேயே ஒரு பெரும் புரட்சியையும் மாறுதலையும் உடனே ஏற்படுத்த வேண்டும். வெளியிலிருந்து கொண்டு தொண்டாற்றும் விரும்பத்தகாத அரசியல் தலைவர்களைத் தள்ளிவிட்டு, தொழிலாளர்களாலேயே நிர்வகிக்கப்படும் தொழிற் சங்கங்களை உடனடியாகப் பாரதம் முழுவதும் நிறுவத் தொழிலாளர்கள் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும்.

சென்னை
2-8-56

ஒய். கிரியப்பா

தலைவர், ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷன் சிப்பந்திகள் சங்கம்.



ஆகஸ்ட் 14-ந் தேதி ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் கவர்னர் ஸ்ரீ பிரகாசாவுடன் டாக்டர் அழகப்பச் செட்டியார் இல்லத்துக்குச் சென்று அவர் உடல் நிலை பற்றி விசாரித்தார். ஜனாதிபதியை வரவேற்ற டாக்டர் செட்டியார், "காரைக்குடியை ஒரு சர்வகலாசாலையாக்க முயன்று வருகிறேன். இது பற்றி இந்திய சர்க்காருக்கும் எழுதியிருக்கிறேன். தங்கள் ஆசீர்வாதத்தால் இது நிறைவேறிவிடும் என்று நம்புகிறேன்" என்று கூறுவதையும் ஜனாதிபதி மலர்ந்த முகத்துடன் அதைக் கேட்பதையும் படத்தில் காணலாம்.

★

## கருத்து மிக்க கடிதங்கள்

தற்பொழுது 'கல்கி'யில் 'தேவியின் கடிதம்' வெளிவருவது தமிழகத்தின் தவப்பேறுதான். வாழ்க்கையில் அழுங்கிக் கிடக்கும் அழகிய கருத்துக்களைச் சல்லடை போட்டுச் சலித்து, வாழ்க்கைப் பண்போடு மலர வேண்டும் என்ற உயரிய நோக்குடன் கடிதம் எழுதப்படுகிறது. பண்டிதர்களும் பாமரர்களும் பன்முறை படித்துப் பயனடையும் வண்ணம் எளிமையும் இனிமையும் ததும்ப இருக்கிறது. அதன் நடை வாசகர்களுக்கு அலுப்புத் தட்டா வண்ணம் கதைகள் மூலமாகப் பல கருத்துக்கள் கடிதத்தில் அள்ளிக் கொடுக்கப்பட்டு வருகின்றன.

அறிவு, அநுபவம், ஆற்றல் ஆகிய இம் மூன்றும்ஒருங்கே ஒருவரிடம் குடிகொண்டிருந்தால்தான் வாழ்க்கையின் நுணுக்கமான பிரச்னைகளை அலசி ஆராய்ந்துஎழுத முடியும். மேற் குறிப்பிட்ட மூன்றும் தேவியின் கடிதங்களில் மின்னுகின்றன. வாசகர்களுக்கு அப்பகுதியைப் படிக்கும்போது அடுத்த வாரக் 'கல்கி' இதழ் எப்போது வரும் என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

பதினைந்து வயதுக்கு மேற்பட்ட பெண்கள், அதிலும் குறிப்பாக, கணவனும் மனைவியும் இதைப் படிக்க வேண்டும்.

வைரியம்பதி
11—8—56

வெண்பை திருஞானம்

★

## விசைத்தறி விஷத்தறியாகும்!

இந்திய சர்க்காரின் ஜவுளிக் கொள்கையில் முக்கியமாக, மக்கள் எண்ணத்தைக் கலங்கச் செய்வது விசைத் தறி போடத் தாராள அனுமதி கொடுப்பதே. கைத்தறித் தொழிலைக் காப்பது, அம்பர் சர்க்காவை ஆதரிப்பது என்று ஒருபுறம் பேசிக்கொண்டே விசைத்தறி வளரச், சர்க்கார் ஆதரவு அளிப்பதைப் பார்த்தால் பழைய கதைதான் நினைவுக்கு வருகிறது. டாக்கா மஸ்லின் உற்பத்தியைக் கண்டு கலங்கிய லங்காஷயர் மன்னர்களைக் காக்க, ஆங்கில ஆட்சியாளர் டாக்கா மஸ்லின் நெய்யும் நெசவுத் தொழிலாளர்களின் கைப் பெரு விரல்களை நறுக்கியும் பிற கொடுமைகளைச் செய்தும் வதைத்தனர். இதனால் குறிப்பாக வங்கத்தில் அன்று இருந்த சுமார் பத்து லட்சம் கைத்தறிகளில் இன்று கிழக்கு பாகிஸ்தான் உள்படச் சுமார் இரண்டு லட்சம் தறிகள்தான் உள்ளன.

தமிழ்நாடு உள்படச் சென்னை மாகாணத்தில் இன்று எட்டரை லட்சம் தறிகள் உள்ளன. இவற்றையும் இந்தியா முழுதும் உள்ள 28,51,684 கைத்தறிகளையும் இரண்டாவது ஐந்து வருடத் திட்டத்தில் அறவே அழிக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள்.

விசைத்தறியால் ஒரு கைத்தறிகூடப் பாதிக்காது என்று கூறுவது மக்கள் எதிர்ப்பிலிருந்து தாற்காலிகமாகத் தப்புவதற்குச் செய்யும்

சூழ்ச்சி! இந்தத் திட்டம் நிறைவேறினல் பஞ்சமும், பட்டினியும் வேலையில்லாத் திண்டாட்டமும் ஏற்படும்.

(1) இருபது கைத்தறிகளில் தயாரிக்கும் துணியை ஒரே ஒரு விசைத் தறியில் தயாரிக்க முடியும். இந்த உண்மைக்கு யாரும் சரியான பதில் தரவில்லை.

(2) கைத்தறி கணக்கெடுப்பது அவர்களுக்கு உதவி செய்வதற்கே. இதையறியாமல், சில தலைவர்கள் கைத்தறியாளர்களிடம் வீண் பீதியை உண்டாக்குவதாகக் குற்றம் சாட்டப்படுகிறது. ஆனல் தறிக் கணக்கு எடுக்கும் ரிஜிஸ்தர் விண்ணப்ப பாரத்தில் தறியில் வேலை செய்யும் நெசவாளியின் பெயரைக் கூடக் குறிக்க அனுமதிக்காதது ஏன்?

பள்ளிபாளையம்
14-8-56
ஏ. நாச்சிமுத்து
காரியதரிசி, கைத்தறி நெசவாளர் சங்கம்

★

## சிரிப்பதா? அழுவதா?

ஜூலை 15-ம் தேதி 'கல்கி' இதழில் வெளியான திருமதி ஜெயாவின் கடிதத்தைப் படித்தேன். மிகவும் தாபத்துடன் எழுதியிருக்கிருர். இதோ என் கதையைக் கேளுங்கள். நானும் இன்னும் சிலரும் 'இலாக்கா சம்பந்தமற்ற' டெலிபோன் ஆப்பரேட்டர் உத்தியோகத்துக்கு விண்ணப்பித்துக் கொண்டோம். அதற்குத் தகுதி எப்படி என்ருல், சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்ட பள்ளிகள் சில 'டெலிபோன் ஆப்பரேட்டர் படிப்பு' ஒரு மாதத்துக்கு நடத்துகின்றன. அதில் படித்துப் பட்டம் பெற்றவர்கள், மற்றும் தனி நபர் தொழில் ஸ்தாபனங்களில் உள்ள டெலிபோன் எக்ஸ்சேஞ்சில் வேலை பார்த்தவர்கள் விண்ணப்பிக்கலாம்.

நானும் இன்னும் சிலரும் ஆப்பரேட்டர் பட்டம் பெற்று விண்ணப்பித்தோம். நாலு மாதங்களுக்கு முன் எங்களைத் திருச்சிக்கு வரும்படி உத்தரவு வந்தது. ஆறு பேர்கள் அழைக்கப்பட்டதில் நாலு பேர்கள் வந்திருந்தனர். எங்கள் சர்டிபிகேட்டுகளைப் பரிசிலனை செய்தனர். பிறகு தலைமை அதிகாரியும், மற்றும் மூவரும் கேள்விகள் கேட்டனர். அவர்கள் கேட்ட கேள்விகள் நாங்கள் பயிற்சிக்காலத்தில் பெருத விஷயத்துக்கு அப்பாற்பட்டவை. இருந்தாலும் பொது அறிவின் பயன் கொண்டு சில கேள்விகளுக்குப் பதில் சொன்னேம். பிறகு செயல் முறைப் பரீட்சை நடத்தினர்கள். அது முடிந்தவுடன் பதில் அனுப்புவதாகக் கூறி அனுப்பினர்.

இந்தத் தேதி வரை எந்தவிதமான பதிலும் இல்லை. கிட்டி முட்டி விசாரித்ததில் 'அவர்கள் நல்ல முறையில் பதில் அளிக்கவில்லை, ஆகவே அவர்கள் எடுக்கப்படவில்லை' என்று அதிகாரிகள் கூறியதாகத் தெரிந்து கொண்டேன். நாங்கள் படித்தது சர்க்கார் அங்கீகரிக்கப்பட்ட பள்ளியில். அதுவும் இதற்கென்று ஏற்பட்ட பாடப் பகுதிகளைப் படித்து நல்ல முறையில் பரீட்சை எழுதியதால்தான் எங்களுக்குச் சர்டிபிகேட் கிடைத்தது. நாங்கள் படிக்காத விஷயத்தில் நன்ருகப் பதில் கூறவில்லை என்று சொல்வதில் அர்த்தமே இல்லை. அதோடு, நாங்கள் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பதையாவது உடனேயே தெரிவித்திருக்கக் கூடாதா?

இதையெல்லாம் நினைத்துச் சிரிப்பதா அழுவதா என்று தெரியவில்லை.

மதுரை
18-7-56
கி. மீனுட்சிசுந்தரம்

★

## பொருள் செறிவுள்ள கட்டுரை

யோகாச்சாரியா சுந்தரம் அவர்கள் தென்னுட்டு மக்களுக்குப் புதியவரல்ல. சில வருடங்களுக்கு முன்பாக 'ஆனந்த ரகசியம்' 'வலிவும் வனப்பும்' என்ற கட்டுரைகளை எழுதி மக்களுக்குப் பிணிகளைப் போக்கும் மார்க்கத்தைப் போதித்தவர். சாதாரணமாக, தேகப் பயிற்சி சம்பந்தப்பட்ட கட்டுரைகள் படிப்பதற்குச் சிரமமாகவே இருக்கும். உற்சாகம் இராது. ஆனல் ஸ்ரீ சுந்தரம் அவர்களின் 'ஆனந்த ரகசியம்' போன்றவைகள் மேற்கண்ட ரகத்தைச் சேர்ந்ததல்ல. அவருடைய கட்டுரைகள், படிக்கப் படிக்கத் தெவிட்டாத தெள்ளமுது. 'ஆனந்த ரகசிய'த்துக்கு முன்னுரை எழுதிய ராஜாஜி அவர்களும், ஸ்ரீ சுந்தரம் அவர்களின் தமிழ் நடையை மிகப் பாராட்டியுள்ளார்கள்.

யோகாசன முயற்சிகளால் குணம் அடைந்தவர்களில் நானும் ஒருவன் என்பதில் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன்.

பம்பாய்
13-8-56
வே. ராமநாதன்

# கடல் கண்ட கனவு




## முன் கதை

வலம்புரித் தீவின் அரசகுமாரனாகிய சித்திராங்க பூபதி ஓர் பௌர்ணமி இரவில் கடலின் கரையிலே வெகு தூரம் நடந்து சென்று விடுகிறான். நிலவுப் பாறைக்கு அருகிலே வரும்போது அதிசயமான காட்சிகளைக் கண்டு அந்தப் பாறையை நோக்கி நடக்கிறான். அப்போது இவனைத் தேடிக் கொண்டு அங்கே வருகிறார் வலம்புரித் தீவின் அமைச்சராகிய மந்திரநாயகம். ''அந்த இடத்துக்குப் போக வேண்டாம்'' என்று அரசகுமாரனைத் தடுக்கிறார் அவர்! பூபதி கேட்கவில்லை. பாறையின் மேல் நின்ற பாழடைந்த கோவிலைத் தாண்டி நடக்கிறான். மந்திரியும் பூபதியைப் பின் தொடருகிறார்.

கோவிலுக்கு அருகே அலைகள் பாறைகளில் தவழும்போது சங்கீத ஒலி அந்தக் கற்களிலிருந்து எழுவது கேட்டுத் திகைக்கிறான் பூபதி! இன்னும் சற்றுத் தொலைவில் ஒரு குகைக்குள்ளே அலைத் தண்ணீர் சென்று மீளுகிற இடத்தில் சோக மயமான ஒலி கேட்கிறது. ''பேரியாழ் என்ற வாத்தியமும் அதை வாசித்துக் கொண்டிருந்த மல்லிநாத யாழ்ப்பாணரும், இந்தத் தீவிலிருந்து தமிழ்நாட்டுக்குச் சென்று மறைந்த நாளிலிருந்து, கோவில் அருள் இழந்து கிடக்கிறது. இந்தத் தீவே பாழடைந்து விட்டது! அதனால்தான் தீவின் தேவதை கண்ணீர் வடிக்கிறது!'' என்கிறார் மந்திரநாயகம்.

பூபதிக்கு இந்த விவரத்தைத் தெரிந்து கொண்ட கணத்திலிருந்து மனத்தில் அமைதியில்லை. தீவின் வீழ்ச்சிக்கு உண்மையான காரணம் என்ன என்று அறிய ஆசைப்படுகிறான். பேரியாழ் என்ற இசைக் கருவி அந்தத் தீவிலிருந்து மறைந்ததற்கும் தீவின் அரசியல் மாறுதலுக்கும் ஏதாவது காரணம் இருக்கக் கூடுமோ என்றும் சந்தேகிக்கிறான்.

வலம்புரித் தீவிலிருந்து தமிழ் நாட்டை நோக்கிப் புறப்படுவது என்று தீர்மானிக்கிறான் பூபதி.

பூபதியின் அன்னை தனது புத்திரன் மூன்று விஷயங்களில் கண்டிப்பாக இருக்க வேண்டும் என்று உறுதிகூறி, அந்த உபதேசம் அடங்கிய ஒரு தந்தப் பேடகத்தை வழித் துணையாகப் பூபதிக்குக் கொடுத்திருக்கிறாள். 'மது அருந்தக் கூடாது', 'மாதரின் மயக்கில் ஆழ்ந்து விடக்கூடாது', 'வீணான யுத்தங்களில் சிக்கி விடக் கூடாது' என்ற மூன்று அறவுரைகள் அந்தப் பேடகத்தில் வர்ணச் சித்திரங்களாக எழுதப்பட்டிருந்தன.

தந்தப் பேடகத்தோடு மாமல்லபுரம் வந்து சேர்கிறான் பூபதி. வழியில் மரக்கலத்தில் ஆதிரையான் என்ற வேளிர் இளவரசனின் நட்பும், இலங்கை யாழ்ப்பாணத்துப் புலவரின் தொடர்பும் பூபதிக்குக் கிடைக்கின்றன.

மாமல்லபுரத்தில் ஒரு பெரிய விடுதியிலே தங்குகிற பூபதிக்கு, அங்கே நடமாடிய சித்தரின் போக்குகளும், அவர் வந்துபேசிய விசித்திர வார்த்தைகளும் திகைப்பைக் கொடுக்கின்றன. பிறகு ஒற்றர்களின் நடமாட்டம் அதிகமாக இருப்பதைக் கண்டு திகைக்கிறான்.

தமிழ் நாட்டிலும் அப்போது பல்லவ ராஜ்யத்தில் பட்டத்துக்குச்

சந்ததியில்லாமல் பரமேசுவரவர்மன் இறந்ததும், தளபதி உதயசந்திரன் தாயாதிக் குடும்பத்தில் உள்ள ஒரு சிறுவனைக் கொண்டுவந்து 'நந்திவர்மன்' என்று அபிஷேகப் பெயர் வழங்கி அரசுரிமை முடி சூட்டியிருக்கிறான். இன்னொரு தாயாதியான சித்திரமாயன் என்பவன் நந்திவர்மனுக்கு எதிராகப் பல சூழ்ச்சிகள் செய்து வருகிறான். இந்தச் சூழ்ச்சிகளுக்கு எல்லாம் முக்கியமான சதிகாரன் அந்த மாமல்லபுரத்து விடுதியின் தலைவனான வீர விக்கிரமன்தான்! இந்தச் சூழ்ச்சியை அறியாத பூபதி வீரவிக்கிரமனின் வலையிலே விழுந்து விடுகிறான். அவனே பூபதியைக் கொடும்பாளூரில் பேரியாழ் இருக்கிறது என்று சொல்லி அந்த ஊரின் 'குங்கும மாளிகை'க்கு அனுப்பி விடுகிறான்.

கொடும்பாளூரின் குங்கும மாளிகைக்கு வந்து சேர்கிற பூபதிக்கு எதிர்பாராத பல சம்பவங்கள் நேர்கின்றன. விடுதியிலே பார்த்த சித்தர் அந்த மாளிகைக்கு வருகிறார்! பேரியாழ் வாசிக்கும் நங்கையின் அழகிலே மோகப்பட்டு மயங்குகிறான் பூபதி. அவளோ 'குங்கும மாளிகை' என்ற அந்தக் கணிகையர் கூடத்தில், தன்னுடைய அன்னையின் போக்குக்கு மனம் ஒப்பாத நிலையில் வேதனையிலே துடித்துக் கொண்டிருக்கிறாள். அவளுக்குப் பூபதியின் சந்திப்பு ஆனந்தம் தருகிறது. அதே சமயம் பூபதியை வீர விக்கிரமன் பல சூழ்ச்சிகளுக்கு உள்ளாக்கப் போவது அறிந்து மனம் நொந்து போகிறாள் நங்கை! மாளிகைக்கு வெளியேயுள்ள நிலை என்ன? உதயசந்திரன் என்ற அந்த மதியூகி வீர விக்கிரமனின் சதிகாரச் செயல்களை உளவறிந்து, நந்திவர்மனுக்குப் பக்க பலமாக முத்தரையர்கள் என்ற குறுநில மன்னர்களைத் தன் கட்சியில் வளைத்துக் கொள்கிறான். இரகசியப் படைப் பயிற்சிக்கு வலம்புரித் தீவையே தளமாக உபயோகிப்பது என்ற முடிவோடு, முத்தரையர்களின் சார்பில் ஒரு தூதுவர், வலம்புரித் தீவுக்குச் செல்கிறார். வலம்புரி அரசகுமாரன் பூபதிக்கு முத்தரையர்களின் அரசகுமாரியைத் திருமணம் முடிப்பது என்ற மங்களத் தூதோடு செல்கிறார் அந்தத் தூதுவர். பூபதியின் அன்னையான வலம்புரி மகாராணி இந்த யோசனைக்கு உடன்பட்ட போதிலும், மகனுடைய சம்மதத்தைப் பெற்றுப் பேரியாழோடு திரும்புவதற்காக மந்திர நாயகத்தையே அந்தத் தூதுவரோடு தமிழ் நாட்டுக்கு அனுப்புகிறாள். இது நடந்து முடிவதற்குள் இதை உளவறிந்து கொண்ட வீர விக்கிரமன், கொடும்பாளூர் வேளிர்களைத் தன்னுடைய கட்சிக்குச் சேர்த்துக் கொண்டு வலம்புரித்தீவை நோக்கி ஒரு கடற் படையை அனுப்பி விடுகிறான்! சித்திரமாயனைக் கொண்டு பாண்டியர்களோடும் உடன் படிக்கை செய்து கொள்கிறான்!

குங்கும மாளிகையிலே தன்னந் தனியாகத் துடிக்கும் பூபதிக்கு வீர விக்கிரமனால் இடையூறு நேரப்போகிறது என்பதை அறிந்த யாழ் நங்கை, மாறு வேஷத்தில் கொடும்பாளூரிலிருந்து வெளியேறுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து, பூபதியை இரவுக்கு இரவே சிவிகையிலே அனுப்பி விடுகிறாள்.

சிவிகை சித்தன்ன வாசல் மலையை நெருங்கவும், அங்கே யிருந்த சமணத் துறவிகள் பூபதியை வரவேற்றுத் தங்கள் குகையிலே அவனுக்கு இடம் வழங்குகிறார்கள். மறுநாள் மாலை துறவிகளோடு சித்தன்ன வாசல் மலையிலே நடந்து செல்லும்போது வலம்புரித் தீவைப்பற்றிய சர்ச்சை நடக்கிறது. பேரியாழைப் பற்றிய பேச்சு வந்ததும் பூபதி மிகுந்த ஆவேசத்தோடு பேசவே, முதலாவது துறவி பூபதியைத் தனியாக அழைத்துக் கொண்டு மலைமேலே நடக்க ஆரம்பித்து விடுகிறார். மற்றத் துறவிகள் தங்கி விடுகிறார்கள். அவர்களில் ஒரு துறவி மட்டும் இதயப் பறவையைப்பற்றி ஓர் ஏக்கப் பாடல் பாடுகிறார். அந்தப் பாடல் பூபதியின் உள்ளத்தை உருக்குகிறது. அவனுடைய நடை தளர்கிறது. சித்திராங்கனும் துறவியும் சித்தன்ன வாசல் மலையின் உச்சியை நோக்கி நடக்கிறார்கள். பூபதியின் மனம் கடந்து சென்ற சம்பவங்களை யெல்லாம் எண்ணி எண்ணிச் சிந்தனைச் சுழலிலே வட்டம் சுற்றுகிறது.

மலையின் உச்சியிலே புராதனமான சமணத் துறவிகள் தங்கியிருந்த 'எழடிப் பட்டம்' என்ற இடத்துக்கு வந்ததும், இருவரும் பாறையில் அமர்கிறார்கள். சமணத் துறவி சித்திராங்க பூபதிக்கு ஒரு கதை சொல்கிறார். ராஜசிம்ம பல்லவன் காலத்தில் அவனுடைய மந்திரி குமாரனும், கொடும்பாளூர் வேளிர் குடும்பத்தைச் சேர்ந்தவனுமான சந்திரசூடன் என்ற வாலிபன் அரசனின் கட்டளைப்படி, பேரியாழ் என்ற வாத்தியத்தைக் கற்று வருவதற்காக வலம்புரித் தீவுக்குச் சென்றான் என்று கதையை ஆரம்பிக்கிறார் சமணத் துறவி. வலம்புரித் தீவுக்கு வந்து சேர்ந்த சந்திரசூடன், அம்மன் சந்நிதியில் நடு ஜாமத்தில் முதியவர் ஒருவர் யாழ் வாசிப்பதையும், அவர் வாசித்து முடிந்ததும் ஒரு வாலிபப் பெண் வந்து அவரை அழைத்துப் போவதையும் பார்க்கிறான்.

## பதினொன்றாம் அத்தியாயம்

# நீலமேக யாழ்ப்பாணர்

வலம்புரித் தீவுக்குச் சென்று, யாழ் வாசிப்பைக் கற்றுத் தேர்வதற்காகத் தமிழ் நாட்டிலிருந்து ராஜசிம்மன் என்ற பல்லவ மன்னனின் மந்திரி குமாரன், மிக்க ஆர்வத்தோடு புறப்பட்ட கதையைத் தொடர்ந்து சொன்னார் சமணத் துறவி. சித்தன்ன வாசல் மலையின் உச்சியிலே 'எழடிப் பட்டம்' என்ற அந்த ஏகாந்தமான சூழலின் அமைதியும், மனித சஞ்சாரமற்ற அந்தப் பிரதேசத்தின் நிசப்தமும், துறவியின் உள்ளத்தை ஆட்கொண் டிருந்தன. சித்திராங்க பூபதியோ, தன்னைப் போல் யாழ் வாசிப்பிலே மோகங் கொண்ட இன்னொரு இளைஞனும் இருந்தானா என்ற திகைப்பிலும் ஆவலிலும், துறவியின் கதையைக் கூர்ந்து கேட்டுக் கொண் டிருந்தான். வலம்புரி அம்மனின் கோவிலிலே நடுஜாமத்தில் யாழ் வாசித்துக் கொண்டிருந்த அந்த முதிர்ந்த பாணர் தமது வாசிப்பை நிறுத்தியதும், இளம் நங்கை ஒருத்தி வந்து, அவரைப் பிடித்

துத் தூக்கி நிறுத்திக் கோவிலின் சுற்றுக்குள்ளே அழைத்துச் சென்றாள் என்ற விவரத்தைக்கேட்டதும், பூபதிக்கு மனம் துணுக்குற்றது. ஓரக் கண்ணால் இதைக் கவனித்துக் கொண்ட துறவி புன்முறுவலோடு கதையைத் தொடர்ந்தார் :—

''இளவரசே! என்ன துணுக்குற்றுப் பார்க்கிறீர்கள்? இங்கேயும் ஒரு கன்னிப் பெண் வருகிறாளே என்று திகைக்கிறீர்களா? என்ன செய்ய? யாழை நாடிப் போகிற இளைஞன் கன்னிப் பெண்களிடமிருந்து தப்பிப்பது கஷ்டந்தான் போலிருக்கிறது! உள்ளத்தின் தன்மை அப்படித்தான் போலும்! ஆனால் பாருங்கள், சந்திர சூடனுடைய அநுபவம் இவ்விஷயத்தில் எதிர்பாராத விதமாகச் சற்று மாறுபட்டு இருந்தது! அதைச் சொல்வதற்கு முன்னால், அதற்கு முன்பு நடந்த சம்பவங்களைச் சொல்லியாக வேண்டுமே! கேளுங்கள்.

அன்றிரவு வலம்புரி யம்மனுடைய கோவிலிலிருந்து பாணரும் அவருடைய மகளும் சென்றுவிட்ட பிறகு சந்திர சூடன் இரவுப் பொழுதில் தங்குவதற்காகத் தன்னுடைய மரக்கலத்துக்கே வந்து விட்டான்.

மறுநாள் விடிந்ததும், வலம்புரித் தீவுக்கு மறுபடியும் வந்து அந்தப் பாணருடைய வீட்டின் விலாசத்தைத் தெரிந்து கொண்டு சந்திரசூடன் அவ் விடத்தை நாடிச் சென்றான்.

நீலமேக யாழ்ப்பாணருடைய வீட்டுக்குச் சந்திரசூடன் சென்றபோது, அவர் தம்முடைய கலையழகு நிரம்பிய இல்லத்தின் வெளித் திண்ணையிலே அழகிய ஒரு திண்டின்மேல் சாய்ந்து கொண்டிருந்தார். அவருடைய மகள் சாருகேசி பேரியாழுக்குத் தந்தி மாற்றிக் கொண்டிருந்தாள். சந்திரசூடன் வீட்டினுள் நுழைந்தான்.

செந்தமிழ் நாட்டில் பல்லவ சாம்ராஜ்யத்திலிருந்து வருவதாகவும், ''வாத்ய வித்யாதரன்'' என்று சிறப்புப் பெயர் பெற்ற ராஜசிம்ம மகாராஜனுடைய மந்திரிகளில் முக்கியமான தலைமை மந்திரியின் குமாரன் என்றும், தனது பெயர் சந்திரசூடன் என்றும் பாணரிடம் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான்! நீலமேக யாழ்ப்பாணருக்கு வாத்ய வித்யாதர அரசரைப் பற்றிக் கேள்வியுண்டு. மகேந்திர வர்ம பல்லவருக்குப் பிறகு தமிழ் நாட்டில் இசைக் கலையில் ஆர்வமும் திறமையும் நிரம்பிய அரசர் அவர்தான் என்றும், தமிழ் நாட்டின் பூர்வமான சங்கீதத்தை வளர்த்துப் போற்றுவதில் அவருக்கு ஈடு இணை கிடையாது என்றும், நீலமேக யாழ்ப்பாணரிடம் பல தமிழ் வணிகர்கள் சொல்லியதுண்டு. எனவே, அப்படிப்பட்ட மன்னரின் அரசவையிலிருந்து வருகிற மந்திரி குமாரன் என்றதும், மிக்க பரிவோடு சந்திரசூடனை வரவேற்றார் பாணர்.

சந்திரசூடன் தான் வலம்புரித் தீவுக்கு வர நேரிட்ட காரணத்தை முதியவரிடம் விவரமாகச் சொன்னான்.

''மல்லிநாத யாழ்ப்பாணர் என்ற பெரியார் இந்தத் தீவிலிருந்துதான் தமிழ் நாட்டுக்கு வந்தார் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இப்பொழுது ராஜசிம்ம மகாராஜாவிடம் தங்களுடைய புனிதமான பேரியாழைப் பற்றி யாரோ விவரமாகச் சொல்லி விட்டார்கள். அதன்பேரில் அந்த வாத்தியத்தின் மகிமையை யறிந்து, அதைப்



பயின்று வரும்படி என்னை அனுப்பியிருக்கிறார்!'' என்றான் சந்திரசூடன். பெரியவர் புன்முறுவல் செய்தார்.

''மந்திரி குமாரா! இங்கேயுள்ள இந்தப் பேரியாழ் இதற்கு முன்பு நீங்கள் பார்த்திருக்கிற வாத்தியங்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. இதன் அமைப்பு முறையும் தனியானது. இந்த வாத்தியம் இந்த வலம்புரிக் கோவில் ஒன்றிலே தான் இருக்கிறது. பூர்வத்தில் தமிழ் நாட்டிலே பூம்புகார் என்று அழைக்கப் பட்ட காவிரிப்பூம்பட்டினத்தில், இது போன்ற பெரிய யாழ் வாத்தியங்கள் இருந்தன. 'கடல்கோள்' என்பதைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். தமிழ் நாட்டின் பூர்வமான ஓலைச் சுவடிகள் பலவற்றை விழுங்கி விட்ட இந்தக் கரு நீலக் கடல், பூம்புகாரின் புராதனமான கலைப் பொருள்களையும் உட்கொண்டு விட்டது. இப்பொழுது இந்த வலம்புரித் தீவின் அம்மன் கோவிலிலே மட்டுந்தான் இந்தப் புராதனமான வாத்தியம் இருக்கிறது. உங்கள் ராஜசிம்ம மகாராஜன் கேள்விப்பட்ட விவரம் உண்மையானதுதான்!'' என்றார் நீலமேக யாழ்ப்பாணர்.

சந்திரசூடன் பாணரிடமிருந்து அடுத்து என்ன பதில் வரப் போகிறது

என்ற ஆவலில் பெரியவரையே இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான்.

பாணர் சொன்னார்:

"இந்த வாத்தியத்தைப் பிறருக்குச் சொல்லிக் கொடுப்பதில் அநேக கட்டுப்பாடுகள் இருக்கின்றன. நீ இங்கே வந்து சேர்ந்திருக்கும் செய்தி வலம்புரி அரச மாளிகைக்குத் தெரியுமல்லவா?" இவ்வாறு கேட்டார் பாணர். சந்திரசூடன் சொன்னான்:

"ஐயா! நான் இங்கே வந்திருப்பது மந்திரி குமாரன் என்ற அரசாங்க அடிப்படையிலே இல்லை. நான் ஒரு சங்கீத மாணவனாக வந்திருக்கிறேன். தங்களுடைய அங்கீகாரமும், ஆசீர்வாதமும் கிடைக்குமானால், தங்களுடனேயே தங்களுடைய சீடனாக இருந்து இந்த வித்தையைக் கற்றுப் போக வேண்டும் என்பதே எனது ஆசை!"

சந்திரசூடன் இப்படிச் சொன்னதும் நீலமேக யாழ்ப்பாணர் தமது வயோதிக விழிகளை அகலத் திறந்து, மந்திரி குமாரனை ஒரு தரம் ஏற இறங்கப் பார்த்தார். மனித சரீரம் என்ற நுட்பமான யாழிலே உள்ள இதயத்தின் தந்திகளிலே, இறைவன் அமைத்து விட்டிருக்கும் ஸ்வர ஸ்தானங்களை ஒரு தரம் தமது விழிகளால் தொட்டுப் பார்த்து நிர்ணயித்துக் கொள்வது போல இருந்தது, பாணரின் அந்தப் பார்வை! சொன்னார்:

''சந்திரசூடா! உன்னுடைய முகத்தையும் கண்களையும் பார்த்தால் உன்னை எனக்கு மிகவும் பிடிக்கிறது. ஆனாலும் ஒன்று சொல்கிறேன் கேள். இந்த வாத்தியத்தை வாசிப்பது என்பது சாதாரணமில்லை. இது மற்ற வாத்தியங்களைப் போல இல்லை. இந்தக் கோவிலிலே அம்பிகையை ஆவாகனம் செய்கிற புனிதமான வாத்தியம் இது! இதை வாசிப்பவன் தீவிரமான நியம நிஷ்டைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆசாரக் குறைவாக இந்த வாத்தியத்தோடு பழகினால் தேவதா கோபத்துக்கே ஆளாக நேரும். இதிலெல்லாம் உனக்கு நம்பிக்கை யிருக்கிறதா என்பதை முதலில் என்னிடம் சொல்லு!''

இவ்வாறு கேட்டார் நீலமேக யாழ்ப்பாணர். இதற்குள் யாழின் தந்திகளை மாற்றிவிட்ட சாருகேசி, தன் தந்தைக்கு அருகிலே சென்று ஏதோ சொல்ல வந்தவள், அன்னிய இளைஞரோடு மிகவும் தீவிரமாகப் பேச்சு நடந்து கொண்டிருப்பதைப் பார்த்து விட்டு உள்ளே சென்று விட்டாள். சந்திரசூடன் சாருகேசியின் அந்த மிடுக்கான நடையிலே பார்வையைச் செலுத்தியவன் மறு விநாடி தன்னைச் சமாளித்துக் கொண்டு பெரியவருக்குப் பதில் கூறினான்.

''ஐயா! நீங்கள் சொன்ன வார்த்தைகளிலே உள்ள தெய்வீகமான பெருண்மையை மனப் பூர்வமாக உணர்கிறேன். தங்களுடைய இலட்சியத்துக் கெல்லாம் முற்றிலும் தகுதி வாய்ந்த ஒரு மாணவனாக என்னை நான் காப்பாற்றிக் கொள்கிறேன். அதுபற்றிச் சந்தேகம் வேண்டாம்!'' என்றான் சந்திரசூடன்.

''அப்படியில்லை சந்திரசூடா! உன்னைச் சந்நியாசியாக இருக்க வேண்டும் என்று நான் சொல்ல வில்லை. அப்படி யெல்லாம் நினைத்துக் கொள்ளாதே! நானும் ஒரு கிருகஸ்தன்தானே! ஒழுங்கு முறை வேண்டும் என்று சொன்னேன்.''

இப்படிச் சொல்லி விட்டுத் தமது முதிர்ந்த உதடுகளை நன்றாகத் திறந்து பரந்த ஒரு சிரிப்புச் சிரித்தார் நீலமேக யாழ்ப்பாணர்.

பிறகு கூறினார்:

''சந்திர சூடா! ஒலியின் தன்மைகளை நம்மவர்கள் உணர்ந்து வைத்திருக்கிற மாதிரி இந்த உலகத்தில் வேறு எந்த நாட்டு மக்களும் உணர்ந்ததில்லை. தந்தியிலிருந்து எழுகிற சில வகையான ஒலிகளால் பெரிய பெரிய மாளிகைகளையும், கூடகோபுரங்களையும் தரை மட்டமாகப் பொடிப் பொடியாகச் சிதற அடித்து விடலாம். தெரியுமா? நம்மைச் சுற்றி நிற்கும் வாயு அணுக்களை யாழின் நரம்பிலிருந்து புறப்படும் ஒலிகளோடு ஒத்து ஒலிக்கும்படி செய்து, இந்தப் பிரபஞ்சத்தில் எத்தனையோ பல அற்புத மாயங்களைச் செய்து காட்ட முடியும். புரிந்ததா?''

இம்மாதிரி ஆரம்பித்த பேச்சானது, கலையின் நுட்பங்களில் எல்லாம் புகுந்து



# பரிமள வாசனையை முகர்ந்திருக்கிறீர்களா!



ஸ்வஸ்திக் வாசனை கேஸ்டர் ஆயிலின் பரிமள வாசனையை நீங்கள் நிச்சயமாக முகர்ந்து பார்த்திருப்பீர்கள். கிளர்ச்சியூட்டும் அதன் வாசனையிலிருந்து மார்க்கெட்டில் கிடைக்கும் கூந்தல் தைலக் கூட்டங்களில், அதை சுலபமாகத் தேர்ந்தெடுக்க முடியும். தவிர, கூந்தலில் அழுத்தித் தேய்க்காமலேயே, உங்கள் கேசத்தை ஒழுங்காகப் படிய வைக்கிறது.

## ஸ்வஸ்திக் வாசனை கேஸ்டர் ஆயில்

**தி ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட், பம்பாய்**

மென்மையான சோப்புகளையும் மற்றும்
கூந்தல் தைலங்களையும் தயாரிப்பவர்கள்

SHILPI S.O.M. 328 TAM

விளையாடிக் கடைசியில் குரு—சிஷ்ய உறவிலே வந்து முடிந்தது!

நீலமேக யாழ்ப்பாணர் தமக்கு ஒரு தகுதியான நல்ல மாணவன் கிடைத்திருப்பதாக எண்ணி மனம் மகிழ்ந்தார். அதே சமயம் அவருடைய வயோதிக உள்ளத்தின் ஓரக் கோடியிலே ஒரு சிறு ஆசை. தமது அருமை மகள், இசையிலே பிறந்து இசையிலே வளர்ந்து இசையிலே உருவாகி யிருக்கும் அந்தச் சாருகேசிக்கு இப்படி ஒரு உத்தம குமாரன், ராஜகளை நிரம்பிய வாலிபன், மணமகனாகக் கிடைத்தால் இருவரும் எத்தனை சிலத்தோடு இல்லறத்தை நடத்துவார்கள்! இப்படி ஓர் எண்ணம் பாணரின் உள்ளத்தில் முகிழ்த்தது!

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# மின்னல் மின்னியது!

சந்திரசூடன் யாழ் வாசிப்பில் மெய்யும், மொழியும், மனமும் ஒன்று சேர்ந்து ஈடுபட ஆரம்பித்தான்.

நீலமேக யாழ்ப்பாணர் தாம் இந்த மாணவனுக்கு யாழ் கற்பிக்க ஒப்புக் கொண்டதிலே படிப் படியாக மகிழ்ச்சி அடைய ஆரம்பித்தார். தமக்குப் பிற்காலம் தம்முடைய திறமைக்கு ஒரு சந்ததி கிடைத்திருப்பதோடு, தம்முடைய மகளுக்குப் பொருத்தமான ஒரு வாலிபனை அவன் விளங்குவதனால் தமது குடும்பப் பரம்பரைக்குமே மிகவும் சிறப்பான சந்ததி வாய்த்து விட்டதாக அவர் எண்ணினார். வலம்புரி யம்மனுக்கு இத்தனை ஆண்டுகள் தாம் பக்திபூர்வமாகச் செய்துவந்த இசைத் தொண்டு பயனற்றுப் போய்விடவில்லை என்ற திருப்தி, நெஞ்சில் பால் வார்த்தது.

நாளாக நாளாகக் கிழவரின் அந்தரங்கமான விருப்பத்தை நன்குகப் புரிந்து கொண்டான் சந்திரசூடன். அது சம்பந்தமாக அவனுடைய அறிவில் அதிக ஆராய்ச்சிக்கு இடம் ஏற்படாத முறையில், யாழும் இசையும் அவனைப் பூரணமாக உட்கொண்டிருந்தன. எப்பொழுதாவது அந்த யாழுக்கு நரம்புகளை மாற்றி அமைக்கும் பணியில் சாருகேசி சந்திரசூடனுக்கு உதவி செய்வதுண்டு. அப்பொழுதுங்கூட அவன் வித்தியாசமான எண்ணங்கள் ஏதும் இன்றியே மனத்தைப் பவித்திரமாக வைத்துக் கொண்டான். ஒன்று, பெரியவர் அந்த யாழைப் பற்றிச் சொல்லியிருந்த பரிசுத்தமான செய்திகளினால் சந்திரசூடனுடைய உள்ளத்தில் ஏற்பட்டிருந்த பயபக்தி! இரண்டாவது, எப்பொழுதும் பகலும் இரவும் ராகங்களோடும், ராக கன்னிகளோடும் நாத உலகிலே சஞ்சரித்துக் கொண்டிருந்த சந்திரசூடன் பாணரின் கன்னியான சாருகேசியையும் அப்படிப்பட்ட ஒலி வடிவமான ஒரு ராக கன்னிகையாகவே கண்டான்!

இப்படி யிருக்கும்போதுதான் யாழ்ப்பாணருக்குத் தம்முடைய மாணவனின் முன்னேற்றத்தில் திருப்தி யேற்பட்டு, அவனையும் வலம்புரி யம்மனின் கோவிலுக்குப் பூஜை நேரங்களில் தம்மோடு இணைந்து யாழ் வாசிப்பதற்காக அழைத்துப் போக ஆரம்பித்தார். சில நாட்களில் அந்திக் கால பூஜைகளுக்கும் சந்திரசூடன் பெரியவரோடு அம்மன் கோவிலுக்குச் செல்லத் தொடங்கினான்.

ஒரு நாள் மாலை. உத்தராயண புண்ணிய காலத்தின் ஆரம்ப நாள் அது. அன்று வலம்புரி அம்மன் கோவிலிலே விசேஷ பூஜை. 'சாயரட்சை' என்ற பூஜை, பக்தி சிரத்தையோடு நடந்து கொண்டிருந்தது. நீலமேக யாழ்ப்பாணர் அம்மன் சந்நிதியிலே இருந்து யாழ் வாசிக்க ஆரம்பித்தவர் சற்று நேரத்துக் கெல்லாம் யாழைத் தமது மாணவனிடம் கொடுத்து ஆசீர்வதித்து, "தொடர்ந்து வாசி சந்திர சூடா!" என்றார். மாணவனும் மிக்க அடக்கத்தோடு பெரியவரிடமிருந்து யாழைக் கைத் தாங்கலாக ஏந்தி வாங்கிக் கொண்டு தனது உடம்பிலே அணைத்த வண்ணம் வாசிக்க ஆரம்பித்தான்.

அந்தி மாலையின் வர்ணக் கதிர்கள் வானத்திலே கோலம் தெளிப்பது போலவும், நீலக் கடலின் சுந்தர அலைகள் வானத்தை நாடித் துள்ளிக் குதிப்பது போலவும், யாழின் நரம்புகளிலே சந்திரசூடனின் விரல்கள் விளையாடத் தொடங்கின. தனது சிஷ்யனுடைய வாசிப்பிலே யாழிலிருந்து எழுந்து வரும் இன்ப இசையைக் கேட்டுப் பேரானந்த நிலையிலே உள்ளம் முழுதும் கூடி, அப்படியே அசைவற்று இருந்தார் நீலமேக யாழ்ப்பாணர். ஆனால் அப்பொழுது?

சாயரட்சை சேவைக்காக வலம்புரி அரசகுமாரி தரங்க வல்லி தன்னுடைய சேடிப் பெண்கள் புடை சூழ, நட்சத்திரங்கள் சூழ்ந்த கூட்டத்தில் சந்திரன் பவனி வருகிற மாதிரி அந்தக் கோவிலுக்குள்ளே உதித்து வந்தாள்!

மெல்லிய மலர்களை மிதித்து வருவது போல அவள் தாமரைப் பாதங்கள்

மென்னடை நடந்தன. சந்நிதியை நோக்கி வந்தாள் தரங்கவல்லி.

யாழிலே விரல்கள் ஓடிக் கொண்டிருக்கின்றன. விரல் முந்தியதா, விழி முந்தியதா, அல்லது மனம் முந்தியதா என்று சொல்ல முடியாத விதத்தில், சந்திர சூடனுடைய விரலும் விழியும் மனமும் ஒன்றாகி அந்தத் தெய்விக வாத்தியத்திலே இணைந்து இழைந்து கொண்டிருந்தன. ஆனால் இதென்ன! கன்னங் கரிய கார் வானத்தில் பளீர் பளீர் என்று ஒளி மயமான மின்னற் பிழம்பு பளிச்சுப் பளிச்சென்று சுருண்டு நெளிந்தது போல, ஒரு கணத்தில் சந்திர சூடனுடைய இரு விழிகளிலும் தேஜோமயமான பிரகாசம் பாய்ந்தது! இருளிலே வீசிய மின்னல் அவனுடைய கண்களைக் கூசச் செய்தது. தெளிவோடு சர்வ நிச்சயத்தோடு ஒலிப் பாதையிலே 'விறு விறு' என்று பறந்து சென்று கொண்டிருந்த சந்திரசூடன் கண்களை மூடினான். அவனுடைய பார்வை இருண்டது! யாழிலே அபஸ்வரம் பேசியது!

இதுவரை இமைகளை மூடிக் கொண்டிருந்த கிழவர், நீலமேக யாழ்ப்பாணர், பதறிப் போய்க் கண்களைத் திறந்தார்.

''தம்பி!'' என்றார். அது வெறும் அழைப்பு இல்லை. அவருடைய இதயத்தின் ஓலம் அது!

''மன்னிக்க வேண்டும்!'' என்று சொன்ன சந்திரசூடன் மறு விநாடி தனது அங்கங்களை யெல்லாம் மூச்சைப் பிடித்து ஒருமித்துக் கொண்டு, திமிறி ஓட முயன்ற இதயத்தைத் திருகிக் கொண்டு வந்து யாழிலே பதித்த வண்ணம் இசையைத் தொடர்ந்தான்!

அன்றிரவு வீட்டுக்குத் திரும்பியதும், அதே ராகத்தை மீண்டும் வாசிக்கச் சொன்னார் நீலமேக யாழ்ப்பாணர். சந்திரசூடன் இப்பொழுது எவ்விதமான மாசும் இல்லாமல் பழுதற்ற முறையிலே வாசித்து விட்டான்! இதில் மிகவும் திருப்தியடைந்த பாணர் பரிவோடு தம்முடைய மாணவனுக்கு உபதேசம் செய்தார். யாழ் வாசிப்பில் எப்பொழுதுமே அபஸ்வரம் விழாமல் மிகவும் பக்தி சிரத்தையோடு கவனமாக வாசிக்க வேண்டும் என்றும், இல்லாவிடில் ஏற்கனவே தான் எச்சரிக்கை செய்தது போல தெய்வ கோபத்துக்கு ஆளாக நேரும் என்றும் கண்டித்தார்.

அன்று முழுதும் சந்திரசூடன் உணவு அருந்தவில்லை. ''நான் செய்த பிழைக்கு இப்படி ஒரு பிராயச்சித்தம் அவசியம்!'' என்றான் அவன். கிழவரும் அதை மிக்க உற்சாகத்தோடு ஆமோதித்தார்.

அன்றிலிருந்து சந்திரசூடன் தன்னுடைய யாழ் வாசிப்பில் முன்னைவிட மிகக் கவனமாக இருக்க ஆரம்பித்தான். இத்தனை கண்டிப்பும், முன் கவனமும், பயமும் இருந்த போதிலும் சந்திரசூடனுடைய அந்தரங்கத்தில் ஒரு சிறு ஆசை புதிதாக முளைத்திருந்தது. விழாக் காலங்களில் எப்பொழுதாவது வலம்புரி அரச மாளிகையிலிருந்து யாழ் வாசிக்க வேண்டும் என்று பெரியவருக்கு அழைப்பு வராதா, அப்படி அழைப்பு வந்தால் அவரோடு தன்னையும் அவர் அழைத்துச் செல்ல மாட்டாரா?—இப்படி ஒரு புதிய ஆசை அவனையும் மீறிச் சந்திரசூடனுடைய மனத்தை வேதனைப் படுத்தியது. அந்தத் தவறான ஆசை, அடிக்கடி அந்தரங்கத்திலே தலை காட்டத்தான் செய்தது! ஆனால் வெளியே யாருக்கும் இது தெரியாது!

இந்த இரகசியமான விஷச் சுழற்சியில் நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. நீலமேக யாழ்ப்பாணரோ தமக்கு ஒரு நல்ல மருமகன் கிடைத்து விட்டதாகவும், தம்மிடத்தில் இத்தனை விசுவாசத்தோடு நடந்து கொள்ளும் இந்த உத்தம மாணவன் தமது விருப்பத்தை நிறைவேற்றி இந்த முதிர்ந்த காலத்தில் தன் இதயத்தைக் குளிர்விக்கப் போகிறான் என்றும் கனவு கண்டு கொண்டிருந்தார். இந்தக் கனவை ஓரளவு அறிந்து கொண்டு விட்ட சாருகேசியும், அடுத்த இந்திர விழாவில் தனக்கும் சந்திர சூடனுக்கும் திருமணம் நடக்கப் போகிறது என்றும் அதற்குள் தன்னைப் பூரணமான தகுதி வாய்ந்த ஒரு அரசகுமாரியைப் போல் குணமும், நலமும், சீரும் சிறப்பும் நிரம்பிய ஒரு நங்கையாக ஆக்கிக் கொண்டு விடவேண்டும் என்றும் ஆசைப் பாலம் கட்டிக் கொண்டிருந்தாள். கள்ளம் கபடம் இல்லாத, ஸ்வர சுத்தமான ஒரு ஜன்ய ராகத்தைப் போன்ற அவளுடைய எளிய இதயத்தில், சந்திரசூடனைப் பிரதிஷ்டை செய்து அந்தத் தெய்வத்துக்கு அல்லும் பகலும் அனவரதமும் பூஜை செய்தாள் சாருகேசி.

இப்படியாக, மூன்று தந்திகளை இணைத்து முறுக்கிய யாழ்ப்பாணரின் குடும்பம் என்ற இந்த நுட்பமான யாழில், மூன்று நரம்புகளிலும் மூன்று ஸ்தாயிகள் பேசிக் கொண்டிருந்தன! இந்தத் தருணத்திலேதான் வலம்புரி அரச குமாரியான தரங்கவல்லிக்குத் திருமணம் நிச்சயம் ஆகியிருக்கிறது என்ற செய்தி அந்தத் தீவு முழுவதிலும் பரவிற்று! யாரோ ஒரு வழிப்போக்கன் நீலமேக யாழ்ப்பாணரின் வீட்டுக்கே வந்து இந்தச் செய்தியைச் சொல்லி விட்டுப் போனான்! அந்த வார்த்தைகள் சந்திரசூடனுடைய செவியிலும் வந்து விழுந்தன! (தொடரும்)




# இந்த முக க்ஷவரப் பரீக்ஷையை நீங்களே செய்து பாருங்கள்

சிறந்த பிளேட் எது என்பதை சுலபமாக நிர்ணயிக்க, எந்த பிளேட் வெகுகாலம் கூர்மையுடன் இருக்கிறது எனக் கவனியுங்கள். ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகள் மழமழப்பானது. ஒவ்வொரு பிளேடும் அதிகப்படியான சுக க்ஷவரங்களை அளிக்கின்றன என்று உங்களுக்குத் தெரியவரும். இதனால் உங்கள் பணம் மிச்சமாகிறது. வேறெந்த பிளேடுகளைக்காட்டிலும் ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகள்தான் நீங்கள் செலவழிக்கும் பணத்திற்கு அதிகப்படியான பெறுமானம் அளிக்கிறது. இன்றே அவைகளை வாங்கி பரீக்ஷியுங்கள்.




**7 o'clock BLADES**

ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகள்



# பானை பிடித்தவள்

நான்கு வருடங்களுக்கு முன் சோலைப்பட்டி வெறிச்சோடிக் கிடந்தது. அதன் செழிப்பு மிக்க வயல்கள் வறண்டு கிடந்தன. மழை இல்லாமல் வானம் பார்த்த பூமி எப்படி வளமாக இருக்க முடியும்? பிழைப்பைத் தேடிப் பெரும்பாலான கிராம மக்கள் பட்டணத்தை நோக்கிச் சென்றனர்.

பணம் படைத்த சில விவசாயிகள் தண்ணீர் இருக்குமிடம் கண்டு பிடித்துக் குழாய்கள் வைத்து ஏதோ சிறிதளவு பயிர் செய்து வாழ்ந்தனர். ஆனால் ஏழைகளின் பாடுதான் மிகவும் திண்டாட்டமாகி விட்டது.

வீரேச கவுண்டர் பெரிய செல்வச் சீமானாக இல்லாவிட்டாலும், தம் இரண்டு பிள்ளைகளுக்கும் கிராமத்தில் பரம்பரைச் சொத்தான இரண்டு வீடுகளும், சிறிது நிலமும் இரண்டு பசுக்களும் வைத்துவிட்டுத் தான் போனார்.

ராசு கவுண்டன் எப்போதும் மனைவி காளிக்கு அடங்கினவன். எல்லாம் அவள் சொற்படிதான். ஆனால் அவன் தம்பி முருகேச கவுண்டனும், அவன் மனைவி பொன்னியும் அப்படி இல்லை. இருவரும் லட்சிய தம்பதிகளாயிருந்தனர். முக்காலும் கணவனுக்கு அடங்கி அவன் சென்ற வழியையே பின்பற்றுவாள் பொன்னி.

மனைவியின் வாய்க்குப் பயந்த ராசு கவுண்டன் அவள் சொற்படி யெல்லாம் ஆடிவந்தான்.

பாகப் பிரிவினை முடிந்து மூன்றும் நாள் பட்டணத்திலிருந்து காளியின் அக்காள் மகன் செல்லையன் கிராமத்துக்கு வந்தான். கிராமம் காய்ந்து கிடந்தது. அதைப் பார்த்த செல்லையன், "என்ன சின்னம்மா, இந்த நிலத்தைப் போல் நீங்களும் காயப் போறீங்களா?" என்று கேட்டான் மிகவும் கேலியாக.

"பின்னே என்ன தம்பி செய்யச் சொல்லுறே? இங்கே பிறந்தவள் எங்கே போவது?" என்று கேட்டாள் காளி அசிரத்தையாக!

"எல்லாரும் உங்களைப் போல இருக்காங்களா, என்ன? பிழைக்கத் தெரிஞ்சவங்க பட்டணம் போறாங்க. எங்களுக்கு என்ன கவலை? மழை பெய்தாலும் ஒண்ணுதான், வெய்யில் காய்ஞ்சாலும் ஒண்ணுதான். முதல் தேதி அன்னைக்கு முழுசா ஐம்பது ரூபாய். அது தவிர வருஷத்திலே இரண்டு போனஸ். இதெல்லாம் என்ன பிழைப்பு, சின்னம்மா?"

அவன் சொன்னதைக் கேட்ட காளி அதிசயத்தில் வாயைப் பிளந்தாள்.

"ஆமாம் தம்பி! நீ வேலை பார்க்கிற இடத்திலே இருக்கும் ஒரு வேலை பாரேன். நானும் பட்டணம் வரேன்" என்றாள்.

"அதுக்கென்ன சின்னம்மா, எங்க கண்ணாடிக் கம்பெனி முதலாளிக்கு என்னைக் கண்டா உசிரு. நான் சொன்

சே. கனகவல்லி

ஞல், அதைத் தட்டவே மாட்டாரு'' என்ஞன் அவன் பெருமையாக.

செல்லையன் போன பிறகு காளிக்கு இருப்பே கொள்ளவில்லை. வானத்தை அண்ணாந்து பார்க்கிற பிழைப்பும் ஒரு பிழைப்பா என்று அவனுக்குத் தோன்றி விட்டது.

ராசு கவுண்டனைப் பட்டணம் கிளம்புகிற வரையில் துளைத்தெடுத்து விட்டாள். ஒரு வாறாக ராசு கவுண்டன் பட்டணம் புறப்பட்டுப் போய் விட்டான்.

அண்ணன் புறப்பட்டதும் தம்பி முருகேசனும் கிளம்பினுன். ஆனுல் பொன்னி தடுத்து நிறுத்தினுள். ''என்ன மச்சான், பட்டணத்திலே வேலை கிடைக்குமின்னு என்ன நிச்சயம்? பசு இருக்குது; ஒரு கறிகாய்த் தோட்டம் போட்டுப் பிழைச்சுக்கலாம். கொஞ்ச நாள் கஷ்டப்பட்டால் கடவுள் தாஞ கண்ணைத் திறக்கிருரு. மழை பெய்யாமல் போகாது'' என்று தைரியம் கூறினுள். மனைவியின் விருப்பப்படி கிராமத்திலேயே தங்கி விட்டான் அவன். சூன்யமாகக் காட்சியளித்த கிராமத்தில் சிலர்தான் தங்கி யிருந்தனர்.

முருகேசன் நல்ல உழைப்பாளி. மானஸ்தன். பணம் இல்லாத போனுலும் உலக அனுபவம் இருந்தது. 'போது மென்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்ற கொள்கை உடையவன். அவனுக்குத் தக்க துணையாகவும், பக்கபலமாகவும் வாய்த்து விட்டாள் அவன் மனைவி பொன்னி.

ராசுவின் மனைவி காளி அப்படியல்ல. முற்றிலும் மாறுனவளாக இருந்தாள். தன் புருஷன் நிறையச் சம்பாதிக்க வில்லை, தான் நிறைய நகை நட்டுப் போட்டுக் கொள்ளவில்லை, சுகமாக வாழ வசதி இல்லை என்ற பெருங் குறைகள் அவளை வதைத்து ஆட்டி வைத்தன. போதாக் குறைக்குச் செல்லையனின் பேச்சுகள் அவள் ஆசைக்குத் தூபம் போட்டன.

* * *

**ரா**சு கவுண்டனுக்கும், காளிக்கும் பட்டணத்துக்கு வந்த பிறகுதான் கிராமத்தின் அருமை தெரிந்தது. தங்களை அழைத்துச் செல்லச் செல்லையன் வருவான் என்று எதிர்பார்த்த ராசுவும், காளியும் பெருத்த ஏமாற்றம் அடைந்தார்கள். முன்பின் தெரியாத ஊரில் திக்குத் திசை தெரியாத ராசு கவுண்டன் எப்படியோ தட்டுத் தடுமாறிக் கொண்டு செல்லையனின் வீட்டைக் கண்டு பிடித்துப் போனபோது வீடு பூட்டிக் கிடந்தது.

ராசு கவுண்டனுக்குத் தன் மனைவியின் மேல் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. என்ன செய்வது? 'ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு' என்பதைப் போல் இப்போது ஆத்திரப்பட்டு என்ன பயன்? செல்லையனின் பேச்சில் வகையாகச் சிக்கிக் கொண்டான் ராசு கவுண்டன். கடைசியில், ''இந்தா காளி, இப்படி இந்த வீட்டுத் திண்ணையிலே உட்கார்ந்து கொண்டிரு. நான் போய் அவன் வேலை செய்கிற கம்பெனியிலே விசாரிச்சுக்கிட்டு வரேன்'' என்று கூறிவிட்டுக் கிளம்பினுன்.

ஆனுல்......

கண்ணாடித் தொழிற்சாலையின் வாயிலில் பெருத்த குழப்பமே நடந்து கொண்டிருந்தது. ராசு கவுண்டனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. அங்கு இருந்த ஒருவரை விசாரித்ததில், ''கம்பெனிக்கு நஷ்டம் வந்திடுச்சாம். தொழிலாளிங்க போனஸ் வேணுமின்னு கேட்கிருங்க. கம்பெனிக்கு நஷ்டம் வந்தால் போனஸ் எப்படிக் கொடுக்க முடியும்? அதுதான் தகராறு. தொழிலாளிங்க வேலைநிறுத்தம் செய்துட்டாங்க'' என்று கூறி விஷயத்தை விளக்கினுர். ராசுவுக்கு அவை ஒன்றும் சரியாகப் புரியவில்லை. 'இக்கரைக்கு அக்கரை பச்சை' என்று எண்ணியபடி வந்த வழி திரும்பினுன்.

திண்ணையில் அமர்ந்திருந்த காளியின் முகத்தைப் பார்க்கச் சகிக்க வில்லை. அவள் கண்களில் வழிந்த கண்ணீரைக் கண்டு ஒரு கணம் திடுக்கிட்டான் ராசு கவுண்டன்.

''என்ன காளி, ஏன் அழுவறே?'' என்று கேட்டான் ராசு கவுண்டன்.

''செல்லையன் வேலையை விட்டுப் போய் ஒரு வாரமாகி விட்டதாம்'' என்று கூறித் துக்கத்தால் திணறினுள் காளி.

''அடப்பாவி, அவனை நம்பினேனே? மண்



குதிரையை நம்பினவன் கதையைப் போலாகி விட்டதே' என்று எண்ணி வருந்தினன். ஆனல் என்ன செய்வது? மனம் தளர்ந்து உட்கார்ந்து விட்ட காளியின் முன் தானும் வருந்தி நிற்கலாமா என்று எண்ணிய ராசு கவுண்டன், ''இந்தப் பெரிய பட்டணத்திலே ஒரு வேலை கிடைக்காமலா போகும்?'' என்று தைரியம் கூறினன். காலையிலிருந்து சாப்பாடு இல்லை. கையிலிருந்த சில்லறையை எடுத்துக் கொண்டு அவன் புறப்பட்டான்.

* * *

'எப்படியோ பிழைத்து விடலாம் என்று எளிதாகக் கூறிவிடலாம். ஆனல் செயலில் முடிப்பதுதான் கடினம்' — அப்படித்தான் பொன்னி தன் கணவனுக்குக் கூறினள்.

பகலைப் பராமரிப்பதும், தோட்டம் போடுவதும் அவ்வளவு எளிதாக இருக்கவில்லை. பூமியில் ஒரு புல் இல்லை. கிணற்றில் ஒரு பொட்டுத் தண்ணீர் இல்லை. நாலைந்து மைல்களுக்கு அப்பால் சிறிய கீற்றுக்களாய் ஓடிக் கொண்டிருந்த காட்டு வாய்க்கால்தான் அந்த ஊருக்கு ஆதாரம்.

அதற்காக முருகேசன் பேசாமல் இருக்கவில்லை. குழாய் வைத்தவர்களுடன் கூடமாட இருந்து உதவி செய்து அவர்களால் தனக்கும் சிறிதளவு தண்ணீர் வசதி செய்து கொண்டான். நாலு பேருடன் நாமும் ஒத்துப் போனல்தானே நாமும் சுகமாக வாழலாம்?

முதலில் சிறிய காய்கறித் தோட்டம் போட்டான். அவன் நன்றாய்ப் பாடுபட்டு உழைத்ததின் பலன் வீண் போகவில்லை. நாளடைவில் அதுவே பெருகித் தோட்டம் செழித்து வளர்ந்து காய்கறிகள் வண்டி வண்டியாய்க் காய்த்தன. காய்கறிகளை அயலூருக்கு அனுப்பி விற்று வந்தான். பொன்னியும் பால் தயிர் விற்று மீதம் பிடித்த காசில் இரண்டு கறவை மாடுகள் வாங்கினள். எப்பொழுதும் உழைப்புக்குத் தக்க பலன் உண்டு. உழுவதற்குத் தக்க பலன் உண்டு. உழுவதற்கு மாடுகள் வாங்கியபின் முருகேசனுக்கு ஒரு குறையும் இருக்கவில்லை. கையில் இரண்டு காசு சேர்த்து விட்டான். ஆனல் பட்டணம் போன அவன் அண்ணனின் நினைவு அடிக்கடி எழுந்து அவனை வேதனைப் படுத்தும். 'அவன் எங்கே இருக்கிறன்? என்ன வானன்?' என்பதைப் பற்றி ஒரு தகவலும் தெரியவில்லை. என்னதான் பாகம் பிரிந்தாலும் பாசத்தைப் பிரிக்க முடியுமா?

* * *

பிற்பகல் பன்னிரண்டு மணி. நல்ல உக்கிரமான வெய்யில். அந்த வெய்யிலில் உருகும் தார் ரஸ்தாவில் வேதனையுடன் முகத்தைச் சுளித்தவாறு வந்து கொண்டிருந்தார் ஒருவர்.

''சாமி! சாமி! ரிக்சா வேணுங்களா?'' என்றவாறு ரிக்ஷாவை இழுத்துக் கொண்டு ஓடி வந்தான் ரிக்ஷாக்காரன் ஒருவன்.

அவனை நிமிர்ந்து பார்த்தவர், ''அட, நீயா? என்னடா ராசு, இதுதான் நீ பட்டணத்துலே பார்க்கிற வேலையா? மனைவி பேச்சைக் கேட்டு வேலை, வேலைன்னு பட்டணம் ஓடி வந்தியேடா? உனக்கேனப்பா இந்தத் தலை விதி. உன் தம்பி கிராமத்திலே நல்லா உழைச்சு முன்னுக்கு வந்திட்டான். நீயானு, இந்தத் தார் ரோடில் மாடு கணக்கா ஓடறே'' என்றார். அவர்தான் சோலைப்பட்டியின் மணியக்காரர் சுந்தரம்.

அதைக் கேட்டு ராசு தலை குனிந்தான். அவர் முகத்தை நிமிர்ந்து பார்ப்பதற்கும் அவன் கூசினன்.

சோலைப்பட்டியில் மஞ்சள் வர்ண மாடிக் கட்டடம்தான் முருகேசனின் வீடு. ஐந்து வருடத்தில் உழைப்பின் காரணமாக மேன் மேலும் உயர்ந்தான் முருகேசன். மாடிவீடும், பெட்டி வண்டியும் அவனைக் கிராமத்துப் பெரிய மனிதருள் ஒருவனாக்கிவிட்டன.

வண்டியிலிருந்து இறங்கிய மணியக்காரர் ஸ்டேஷனுக்கு வெளியில் வந்தார். அங்கு எதேச்சையாக வந்து நின்ற முருகேசனை அவர் பார்த்து விட்டார்.

''என்னப்பா முருகேசா, சுகமா இருக்கிறயா?'' என்று கேட்டார்.

''இருக்கேனுங்க'' என்றன் முருகேசன்.

''ஆமாம், உன் அண்ணனிடமிருந்து கடிதம் ஏதேனும் வருதா?'' என்றர்.

''ஊஹூம், இல்லீங்களே, நாலஞ்சு வருசமா காயிதமும் போடலை. எங்கே இருக்காருன்னு தெரியவில்லை. பட்டணத்திலே ஏதோ பெரிய வேலை கிடைச் சிருக்கும். அது தான் நம்மை எல்லாம் மறந்துட்டாரு'' என்றன் அவன் மனத்தாங்கலுடன்.

''அட பைத்தியக்கார மனுஷா! உன் அண்ணன்



பட்டணத்துக்குத்தான் ரோடிலே ரிக்ஷா இழுத்துப் பிழைக்கிறான்'' என்றார் மணியக்காரர்.

''ஆ......என்ன சொன்னீங்க? என் அண்ணன் ரிக்ஷா இழுக்குதா?'' என்றவன் அப்படியே இடிந்து போய் உட்கார்ந்து விட்டான். ஆயிரம் சம்மட்டிகள் ஒரே சமயத்தில் தாக்குவது போன்ற வேதனை அவனுக்கு ஏற்பட்டது. அவன் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பெருகி வழிந்தது. அவன் துடித்துப் போய் விட்டான்.

அன்று இரவு வண்டிக்கே பட்டணம் புறப்பட்டான் முருகேசன். விஷயத்தைப் பொன்னியிடம் அவன் சொன்னபோது அவள் அழுது கண்ணீர் விட்டாள்.

''எப்படியும் நான் போய் அண்ணனைக் கூட்டி வந்துடறேன். நீ கவலைப்படாதே'' என்று கூறி விட்டுப் புறப்பட்டான். அண்ணனைப் பட்டணத்தில் எங்கே போய்த் தேடுவது? அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. ஒரே குழப்பமாகி விட்டது. உறக்கம் வரவில்லை. வண்டியில் 'டடக், டடக்' என்ற சப்தம் அந்த இரவின் அமைதியைக் கிழித்துக் கொண்டு எதிரொலித்தது.

பட்டணத்தில் இறங்கிய முருகேசன் அன்று முழுவதும் அண்ணனைத் தேடி அலைந்தான். அலைந்து அலைந்து அவன் கால்கள்தான் ஓய்ந்து விட்டனவே தவிர எந்த ரிக்ஷாக் கும்பலிலும் அவனைக் காணவில்லை.

இப்படியே நாலைந்து நாட்கள் ஓடி விட்டன. அண்ணனைக் காணாமல் மனம் சோர்ந்து விட்டான் முருகேசன். இன்று ஒரு நாள் மட்டும் தேடிப் பார்த்து விட்டு மறு நாள் கிராமத்துக்குத் திரும்பிச் செல்ல வேண்டியதுதான் என்று எண்ணமிட்டவாறு ரூமுக்குப் போகும் ரஸ்தாவில் நடந்து கொண்டிருந்தான்.

நல்ல அமாவாசை இருட்டு. எதிரில் வரும் உருவம் தெரியாதபடி கும்மிருட்டு. முருகேசனுக்கு உள்ளுக்குள் பயம்தான். அதிக ஜன சஞ்சாரமற்ற இடம். அவன் பையில் கொஞ்சம் பணமும் இருந்தது.

'மடியில் கனமிருந்தால் வழியில் பயம்' என்பதைப்போல் அவன் மனம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. நடையைத் துரிதப்படுத்தியவன் ஒரு திருப்பத்துக்கு அருகில் நெருங்கியபோது பதுங்கி யிருந்த கரிய உருவம் ஒன்று பின்புறமாகத் திடீரெனப் பாய்ந்து அவன் மண்டையில் தாக்கியது.

''அம்மா'' என்று அலறிய முருகேசன் கீழே சாய்ந்தான். அவன் மண்டையிலிருந்து ரத்தம் பீறிட்டு ஓடியது. அந்த உருவம் தரையில் நினைவு தவறிக் கிடந்த முருகேசனின் பையில் கையை விட்டுத் துழாவியபோது பின்புறமிருந்து இரு இரும்புக் கரங்கள் அவன் தோள்களைப் பிடித்து அழுத்தின. அந்தப் பகுதியில் பாரா கொடுக்கும் போலீஸ்காரர்தான் அந்தத் திருடனைப் பிடித்தார்.

* * *

**ம**று நாள், தலையில் பலத்த கட்டுகளுடன் ஜெனரல் ஆஸ்பத்திரி கட்டில் ஒன்றில் படுத்திருந்தான் முருகேசன். மூன்று நாட்களுக்குப் பிறகு அன்றுதான் அவனுக்குச் சுயநினைவு வந்திருந்தது. சுற்று முற்றும் பார்த்த முருகேசனுக்குத் தான் எங்கிருக்கிறோம் என்று புரிந்து கொள்ளச் சிறிது நேரம் சென்றது. அவனை மிகவும் ஜாக்கிரதையாகக் கவனித்து வரும்படி இன்ஸ்பெக்டர் கண்டிப்பாக உத்தரவு போட்டிருந்தார். காரணம் குற்றவாளி பிடிபட்டு விட்டதனால்தான். பல திருட்டுக் குற்றங்களுக்காகவும், முருகேசனை அடித்ததற்காகவும் குற்றவாளியைக் கடுமையாகத் தண்டிக்க வேண்டுமென்று உத்தரவு. அதற்கு முருகேசனின் சாட்சியமும் வேண்டி இருந்தது.

அன்று முருகேசனின் உடல் சற்றுக் குணமடைந் திருந்தது. போலீஸ் ஸ்டேஷனில் இன்ஸ்பெக்டரின் அருகில் அமர்ந்திருந்தான் முருகேசன். குற்றவாளியை அழைத்துவர இரண்டு பேர்கள் சென்றார்கள். அங்கு கூடியிருந்த ஜனங்கள் குற்றவாளியைப் பார்க்க ஆவலாய்க் காத்து நின்றனர்.

குற்றவாளி அழைத்து வரப்பட்டான். இது காறும் தன்னைத் தாக்கிய குற்றவாளியைக் காண ஆவல் மிகுந்து காணப்பட்ட முருகேசன் அவனை நிமிர்ந்து பார்த்தான். அடுத்த நிமிடம் ''நீயா?'' என்று கத்தினான்.

அங்கு கூடியிருந்த போலீஸ் உத்தியோகஸ்தர்களும், மற்றச் சிப்பந்திகளும் திடுக்கிட்டுப் போய் விட்டனர்.

''என்ன! அண்ணன் தம்பியையே தாக்கி வழிப்பறி செய்தானா?'' ஜனங்களின் ஆச்சரியத்துக்கு அளவில்லை.

குற்றவாளியாகக் கையில் விலங்குடன் தலை குனிந்தவாறு நின்றிருந்தான் ராசு கவுண்டன். அவன் கண்கள் நீரைப் பெருக்கின. தன்னால் தாக்கப்பட்டவன் தன் தம்பிதான் என்று அறிந்த போது அவன் மனம் மிகவும் வேதனையடைந்தது.

பிறகு என்ன? வறுமையும், பசிக் கொடுமையும் அவனை மனிதத் தன்மையை இழக்கும்படி செய்துவிட்டன. பலமுறை 'கிராமத்துக்குத் திரும்பிவிடலாம்' என்று அவன் தன் மனைவியிடம் கூறியிருக்கிறான். ஆனால் அதற்கு அவள் சம்மதிக்கவில்லை. பங்கு சொத்துக்களை ராசு விற்றுவிட்டு வந்தபிறகு திரும்பியும் கிராமத்துக்குப் போவது அவனுக்குத் தலை குனிவாய்த் தோன்றியது. ஆகவே, ரிக்ஷா இழுக்கும் பிழைப்பும் கிடைக்காமல், அவன் திருட்டுத் தொழிலில் ஈடுபட்டு விட்டான்.

ராசு கவுண்டனுக்கு ஆறுமாதச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. எல்லாம் மனைவியால்வந்த வினைதான் என்று அவன் எண்ணினான். அவள் பேச்சைக் கேட்டு அழகான கிராமத்தை விட்டுப் பட்டணம் வந்ததால் தானே இந்தச் சிறைவாசம் என்று கருதினான்.

முருகேசனும் அப்படித்தான் நினைத்தான், எல்லாம் மனைவியால் வந்த அதிருஷ்டம்தான் என்று. 'அன்று தானும் பட்டணம் போகக் கிளம்பியபோது பொன்னி தடுத்திராவிட்டால் தனக்கும் அந்தக் கதிதானே கிடைத்திருக்கும். எல்லாம் தம் பொன்னியால் வந்த சுகம்தான். இது தெரியாமலா, 'ஏர் பிடித்தவன் என்ன செய்வான், பானை பிடித்தவன் பாக்கியசாலி' என்று பெரியவர்கள் சொன்னார்கள்' என்று எண்ணினான்.

அழுகை...நிம்மதியின்மை...சந்தோஷமற்ற குழந்தை! அவனைத் தேற்றுவதில் அவன் தாய் களைத்து இளைத்தாள் — இரவில் அவளுக்கு தூக்கமேயில்லை — பகலில் ஓய்வு இல்லை.





கடைசியாக சந்தோஷத்துடனும் ஆரோக்கியமாயுமிருக்கும் சில குழந்தைகளின் தாய்மார்களாகிய தன் சிநேகிதிகளின் யோசனையைக் கேட்டாள். அவர்கள் யாவரும் ஒரே முகமாக 'க்ளாக்ஸோ'வையே தான் சிபாரிசு செய்தார்கள்.

குழந்தைகளின் எலும்பும் பற்களும் உறுதியாய் வளர 'விடமின் டி'யும், ரத்தம் வளம் பெற இரும்பு சத்தும் கலக்கப்பட்ட சுத்தமான புஷ்டியூட்டும் பால்-உணவு ஆகிய 'க்ளாக்ஸோ'வை தன் குழந்தைக்கும் கொடுக்க ஆரம்பித்தாள்.






இப்பொழுது அவனைப் பாருங்கள்! அவனுக்கு ஒரே ஆனந்தம்! அவனுடைய சந்தோஷத்துக்கு காரணம் அவன் தேக ஆரோக்கியம். தவிர ஆகாரம் நன்கு ஊட்டப்பட்டிருப்பதே- 'க்ளாக்ஸோ'வுக்கு நன்றி.

**Glaxo**

'க்ளாக்ஸோ'-குழந்தைகளின் மிகச் சுத்தமான பால்-உணவு

# வீரத்தின் பரிசு



அருள் செல்வநாயகம்

மாலைக் கதிரவன் மேற்கு வானத்தில் ஆடி அசைந்தவாறு பவனி வந்து கொண்டிருந்தான். அவனது உல்லாசப்பவனியிலே, பூங்காவில் விளையாட லோகநாததேவி வந்தாள். அவளைக் கண்ணுற்ற தோழிப் பெண்கள் மூக்கின் மேல் விரலை வைத்தவாறு அதிசயம் அடைந்தார்கள்.

பட்டாடைகளும், வைர நகைகளும் பூணாமல் சாதாரணக் குடியானவப் பெண்ணைப் போல் இளவரசி லோகநாததேவி வந்துவிட்டால் யாருக்குத்தான் வியப்பாகத் தோன்றாது?

தன்னைப் பார்த்தவாறு வியந்து கொண்டிருக்கும் தோழிப் பெண்களைப் புன்முறுவல் தவழ ஏறிட்டு நோக்கினாள் லோகநாத தேவி.

"இளவரசியாரே! மன்னன் மகளான தாங்கள் சாதாரணக் குடியானவப் பெண்ணைப் போல் வந்தால் நாங்கள் நினைக்கக்கூடியதுதான் என்ன...?" என்றாள் ஓர் குறும்புக்காரப் பெண்.

"பட்டாடைகளையும், வைர நகைகளையும் அணிந்து அணிந்து அலுத்துப் போய்விட்டது போலிருக்கிறது!" என்றாள் வேறொரு தோழி.

"ஆமாம். கிரீடம், மாலை, காப்பு இப்படியான ஆபரணங்களென்றால் இலேசுப்பட்டவைகளா? இவைகளின் பாரந்தானென்ன! வல்லிக்கொடி போன்ற இளவரசியாருக்கு இவைகளைச் சுமந்து கொள்வது பெரும் பாரந்தான்" என்றாள் அந்தரங்கத் தோழி.

அவளது வார்த்தைகளைக் கேட்ட அனைவரும் கொல்லென்று சிரித்து விட்டார்கள். சிரித்தவாறே இன்னும் பலவகையான கேள்விகளைத் தொடுத்து லோகநாத தேவியைத் திணற அடித்தார்கள். எல்லாருடைய பரிகாசத்தையும் குதூகலமாகத் தாங்கிக் கொண்ட லோகநாததேவி, "என் தந்தைக்கு ஏமாற்றத்தை அளிக்கத்தான் இவ்வாறு உடை உடுத்தினேன். தந்தையார் என்னைக் கண்டு ஏமாந்து விட்டார். பிறகு நான் சொல்லவுந்தான் ஆச்சரியப்பட்டார். அதே போல் நீங்களும் ஆச்சரியப்பட வேண்டுமென்றுதான் நான் இங்கு வந்தேன். சரி! பரிகாசம் போதும். விளையாடலாமா?" என்றவாறு பூப்பந்தைக் கையிலெடுத்துக் கொண்டாள். அப்பொழுது பூங்காவனத்தின் ஓர் புறத்தில் வாள்கள் ஒன்றோடொன்று மோதும் சத்தம் எழுந்தது. வரவரச் சத்தம் பெரியதாகியதுடன், பலர் ஓடி வரும் ஓசையும் அதிகமான வாள்கள் மோதும் பெருஞ் சத்தமும் கேட்டன.

பூப்பந்தைக் கையிலெடுத்த தேவி, அதனை வீசி எறிந்துவிட்டுச் சத்தம் வந்த இடத்துக்கு ஓடிச் சென்றாள். "அரண்மனைப் பூங்காவில் வாள்போரா? விசித்திரமாக இருக்கிறதே!" என்று முணுமுணுத்தவாறு தோழிகளும் தேவியைப் பின்தொடர்ந்து சென்றார்கள்.

பத்துப் போர்வீரர்கள் வாள் வீசக்கு, அவன் தனியொருவனாக நின்று தனது வாளினால் பதிலிறுத்துக் கொண்டிருந்தான். பம்பரம் போல் சுழலும் அவனது வாளையும், வாளைச் சுழற்றும் விதத்தையும் கண்ணுற்ற லோகநாத தேவி, வியந்தவாறு அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

ஆடம்பரம் எதுவுமின்றி அவன் அணிந்திருந்த உடை, இலங்கை நாட்டவனல்ல, அந்நிய நாட்டவன் என்பதைக் காட்டியது.

களைசொட்டும் யௌவன முகம் அரும்பு மீசையின் அழகினால், பூரணசந்திரன் போல் பொலிந்து கொண்டிருந்தது.

வீரலட்சுமி தாண்டவ மாடும் அவனது பரந்த மார்பும், பம்பரம்போல் சுழலும் அவனது கைகளும், அவளுக்குத் தனியோர் வகையான பிரேமையை ஊட்டியது.

வாட்போர் புரிந்ததனால் உண்டான களைப்பினால், வியர்வைத் துளிகள் அவனது முகத்திலே திட்டுத் திட்டாக இருந்தன. மாலைச் சூரியனின் ஒளியில் அவைகள் முத்துச் சுடர் போல் பிரகாசித்துக் கொண்டிருந்தன. வீர சௌந்தரியமான அந்த முகத் தாமரையைச் சதா பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் போல் தோன்றியது லோகநாத தேவிக்கு.

தன்னை எதிர்த்த வீரர்களெல்லாம் தோற்று ஓடி விட்டார்களென்பதைக் கண்ட அவன், வாளை உறையிலே செருகி விட்டு, தேகத்திலிருந்து பெருகிக் கொண்டிருக்கும் இரத்தத்தைக் கையினால் துடைக்கலானான். அதனைக் கண்ணுற்ற லோகநாத தேவி, ஏதோ ஓர் உணர்ச்சியினால் உந்தப்பட்டு அவனிடம் சென்றாள். தனது சேலையைக் கிழித்து, இரத்தம் பெருகும் இடங்களில் கட்டுகளைப் போடலானாள்.

எதிர்பாராதவண்ணம், தனக்கு உதவி செய்து கொண்டிருக்கும் இளம் பெண்ணை ஏறிட்டு நோக்கியவன் அப்படியே ஸ்தம்பித்தவாறு நின்றான். இலங்கையில் இத்தகைய திவ்ய சௌந்தரியமான பெண்களும் இருக்கிறார்களா என்று வியந்தவாறு அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அவனது காயங்களுக்கெல்லாம் கட்டுப் போட்டு முடித்த லோகநாத தேவி, அன்பு மலரா அவனை ஏறிட்டு நோக்கினாள்!

“தேவி...நானோ ஓர் அன்னியன். அப்படியிருக்கத் தாங்கள் செய்த உதவியை என்றுமே மறக்க மாட்டேன்.”

“அப்படியா? நீங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்?”

“நான் பாண்டிய நாட்டைச் சேர்ந்த சாதாரணமான ஓர் போர்வீரன். என் பெயர் வீரசிம்மன். இலங்கை மன்னவர் வீரத்தை மதிக்கிறாரென்று கேள்வியுற்றேன். எனது வீரத்தினால் அவருக்குச் சேவை செய்ய முடியுமா என்று அறிந்து கொள்ள உங்கள் நாட்டுக்கு வந்தேன்.”

“இலங்கை நாட்டில் என்றைக்குமே வீரத்துக்கு மதிப்புண்டு.”

“மிகவும் நன்றி. என்னிடமிருந்து விஷயத்தைத் திரட்டுகிறீர்கள். ஆனால் உங்களைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே?”

“என்னைப் பற்றிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது. நான் இந்த நாட்டைச் சேர்ந்த ஓர் வீரப் பெண்மணி.”

“அதுமட்டுமல்ல! அழகான பெண்ணும் கூட.....உங்கள் பெயர்....”

“லோகநாத தேவி.”

“முன்பின் தெரியாத அன்னிய நாட்டவனுக்குப் பேருதவி புரிந்திருக்கிறீர்கள். இந்தநாட்டில் முதன் முதலாகவும் நீங்கள்தான் அறிமுகமானீர்கள். நமது அறிமுகம்...”

“என்றும் மாறாது. இனமும் இந்த மாலை வேளைகளில் உங்களை நான் இங்கு எதிர்பார்த்துக் கொண்டே யிருப்பேன்....” என்றாள் லோகநாததேவி உணர்ச்சிப் பெருக்கோடு.

“ஆகா! உண்மையிலேயே நான் பாக்கியசாலிதான்” என்றவாறு அவளது மென் கரத்தை அன்புடன் பற்றினான் வீரசிம்மன். பரந்த அவனது மார்பிலே, காதலால் கட்டுண்ட லோகநாததேவி தன் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.



அஞ்சலைப் படித்து முடித்த ஆஸ்தான கவிஞரான தருமசேனர், “இப்பொழுது தான் வருகிறாயா, தம்பி?” என்று அன்பு ததும்ப வீரசிம்மனைப் பார்த்துக் கேட்டார்.

“ஆமாம், சுவாமி!” என்று வீரசிம்மன் வெகு பணிவாகக் கூறினான்.

“உன் தந்தையைப் போலத்தான் இருக்கிறாய். அந்த நாட்களில் நானும் உனது தந்தையாரும் இணைபிரியா நண்பர்கள். எத்தனை மனக்கோட்டைகளெல்லாம் எழுப்பியிருந்தோம். கால நீரோட்டத்தால் நான் துறவியானேன். அவர் கிரகஸ்தரானார்.”

“தங்களைப்பற்றி அதிகமாகத் தந்தையார் சொல்லியிருக்கிறார்.”

“சொல்லியிருப்பார். ஆனால் சுலபமாக உன்னை அவர் இலங்கைக்குச் செல்ல அனுமதித்து விட்டாரா?”

“முதலில் மறுத்துவிட்டார். பிறகு எனது பிடிவாதத்தைக் கண்டு அனுமதிவழங்கினார்.”

“மகனின் ஆசையைக் கெடுப்பானேன் என்று எண்ணியிருப்பார். தம்பி! நீ இலங்கையில் எத்தனை ஆண்டுகள் தங்க விரும்பினாலும் எனது இல்லத்தில் தங்கலாம்.”

“தங்களது இல்லத்தில் தங்குவதில் எனக்குத் தடையொன்றுமில்லை. இருந்தாலும், இலங்கை மன்னவர் வீரத்தை மதிக்கிறாரென்று கேள்வியுற்றேன். எனது வீரத்தின் சேவையைச் சிறிது காலத்துக்காவது மன்னவருக்கு ஆற்றலாமென்று எண்ணுகிறேன்.”

“அப்படியென்றால்....”

“பராக்கிரமபாகு மன்னவரின் படையில் சேரலாமென்று எண்ணுகிறேன்.”

“படைவீரனாகவா சேரப் போகிறாய்? எனக்கு அதில் விருப்பமில்லை. ஆனால் நீ விரும்பும்போது நான் எப்படித் தடுக்க முடியும்?”

“சுவாமி! எனது வீரத்திலே எனக்கு நம்பிக்கையுண்டு. ஆதலால்தான் படைவீரனாகச் சேர ஆசைப்படுகிறேன்.”

“சரி! படையில் உனக்கு மிக முக்கியமான பதவியொன்று வாங்கித் தருகிறேன்” என்று கூறினார் தருமசேனர்.

“அதெல்லாம் வேண்டாம், சுவாமி! சாதாரணமான ஓர் போர் வீரனாகவே சேரப் போகிறேன். திறமையினால் முன்னேறுவதுதான் நல்லதென நான் நினைக்கிறேன்.”

“நல்லது. இன்னும் இரண்டொரு நாட்களில் பராக்கிரமபாகுவின் படையெடுப்பு ஆரம்பமாகப் போகிறது!” என்றார் தருமசேனர்.

“அப்படியா? அந்தப் படையெடுப்பில் கலந்துகொள்ள ஓர் தருணம் பெற்றுத்தந்தால் போதுமானது.”

“சரி. உனது விருப்பம் போல் செய்கிறேன்” என்றார் தருமசேனர்.

நாட்டு வளப்பம் காண வந்த வீரசிம்மன் லோகநாத தேவியின் காதல் வலையில் சிக்கி



# நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.



எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.

## கால்கேட்
பெர்பியூம்டு காஸ்டர்
## ஹேர் ஆயில்

---

# சிஸர்ஸ்

சிகரெட்டுகள்



விட்டதால், படைவீரனாகச் சேவை செய்ய எண்ணியுள்ளான் என்பது தருமசேனருக்கு எப்படித் தெரிந்திருக்கும்?

* * *

கோட்டைக்காடைத் தலைநகராகக் கொண்டு, ஆறாம் பராக்கிரமபாகு மன்னவன் இலங்கையை ஆட்சி செலுத்தினான். ஒப்பற்ற வீரனான பராக்கிரமபாகு, இலங்கையை ஒரு குடையின் கீழ் ஆளவேண்டுமென்று எண்ணினான். இலங்கை பல சிறு சிறு இராச்சியங்களாகப் பிரிந்திருப்பது பராக்கிரம பாகுவுக்குப் பிடிக்கவில்லை. சிறு இராச்சியங்களை யெல்லாம் ஒன்றாக்கி ஆட்சியை உறுதிப் படுத்துவதற்காகப் பலங் கொண்ட போர்ப் படைகளை யெல்லாம் தயாரிக்கலானான்.



நிகரற்ற வீரனாகப் பராக்கிரம பாகு இருந்தாலும், இலக்கிய ரஸிகனாகவும் இருந்தான். துறவி வாழ்க்கை நடத்தும் தருமசேனரை ஆஸ்தான கவியாக்கி, கவிஞர் மன்றமொன்றைத் தனது அரச சபையிலே பராக்கிரம பாகு நிறுவினான்.

மன்னனுக்கு ஒரு மகனும், லோகநாத தேவி என்னும் மகளும் இருந்தார்கள். தன்னைப் போலவே தன் மகனும் வீரத்திலே சிறந்து விளங்க வேண்டுமென்று மன்னவன் எண்ணினான். தந்தையின் எண்ணத்தைக் காட்டிலும் பன்மடங்கு சிறப்பாக வீரத்திலே சிறந்து விளங்கினான் அரசிளங் குமரன்.

சிறு இராச்சியங்களைச் சிதைத்து, நடு மையமான இராச்சியத்துடன் இணைப்பதற்காகப் பராக்கிரம பாகுவின் போர்ப் படைகள் திக் விஜயம் செய்யச் சென்றன. இரண்டாண்டுகளாகப் பல இடங்களுக்கும் பெரும் படைகள் சென்று வெற்றி முரசு கொட்டியவாறு தலைநகரினுள் நுழைந்தன.

மன்னவன் வெற்றி விழாவுக்கு ஏற்பாடு செய்தான். வெற்றிவிழா மகத்தான ஓர் விழாவாக இருக்க வேண்டும்; கோட்டை நாடு இதுவரை காணாத திருவிழாவாக இருக்க வேண்டுமெனப் பராக்கிரமபாகு எண்ணி அதற்கான ஏற்பாடுகளை மேற்கொண்டான்.

* * *

சாதாரணப் போர்வீரனாகப் பராக்கிரம பாகுவின் படையில் சேர்ந்த வீரசிம்மன் தனது திறமையைக் காட்டினான்.

பராக்கிரம பாகுவின் இவ்விஜயத்துக்கு வீரசிம்மன் இன்றியமையாதவனாகி விட்டான் என்பதை எல்லாரும் போர்க்களத்திலே கண்டு அகமகிழ்ந்தார்கள்.

வெற்றி வீரனாகத் திரும்பிய வீரசிம்மன் தனது ஆசைக் காதலியைக் காண்பதற்காகப் பூங்காவினுள் நுழைந்தான். அதற்கேற்ப லோகநாததேவியும் வந்து கொண்டிருந்தாள்.

அவள் வருவதைக் கண்ட தோழிப் பெண்கள் ''இளவரசி வருகிறாள்'' என்றவாறு முன் நோக்கிச் சென்றார்கள்.

'இளவரசி வருகிறாள்' என்ற தோழிப் பெண்களின் வார்த்தையைக் கேட்ட வீரசிம்மன் ஏறிட்டு நோக்கினான். அங்கே வண்ண விழி மான்போல் வந்து கொண்டிருந்தாள் லோகநாததேவி.

லோகநாததேவி இளவரசி என்று முன்பே வீரசிம்மன் அறிந்திருப்பானெனில், அலைமோதும் தன் உள்ளத்து உணர்ச்சியை வெளிக்காட்டாமல், அப்படியே மனத்துக்குள்ளே பதுக்கி இருப்பான். ஆனால் காதல் மயக்கத்திலே அவள் யார் என்று விசாரித்து அறிந்து கொள்ள அவன் மறந்து விட்டான். இப்பொழுது உண்மையை அறிந்ததும் அவன் மனம் ஒரேயடியாகக் குழம்பியது.

''வீரரே! வந்து விட்டீர்களா?'' என்றவாறு லோகநாததேவி வேகமாக ஓடி வந்தாள்.

''வந்து விட்டேன்...'' என்று வீரசிம்மன் வெறுப்புடன் கூறினான்.

'என்னிடம் கோபமா?' என்று வீரசிம்மனின் அன்புக் கரத்தைப் பற்றினாள்.

''உன்னிடம் கோபித்துக்கொள்ள எனக்கு என்ன தகுதி இருக்கிறது? மன்னன் மகள் நீ! நான் சாதாரணப் போர்வீரன். அந்தஸ்து நம்மைப் பிரித்து விடுமே!''

''நான் மன்னவன் மகளாக இருப்பது தானே உங்களுக்குப் பிடிக்கவில்லை? இந்தக் கணமே அரச போகத்தையும், அரச வாழ்வையும் உதறித் தள்ளி விட்டு உங்களுடன் வருகிறேன். உங்களுடன் வாழும் பாக்கியம் மட்டும் கிடைத்தால் போதும். இணையற்ற வீரனின் மனைவியென்ற மதிப்பு ஒன்றே போதும்'' என்றாள் லோகநாத தேவி!

அவளது வார்த்தைகள் வீரசிம்மனின் சஞ்சலத்தைப் போக்கின. இருந்தாலும் அந்தஸ்தை அழிக்க முடியாதே யென்ற ஏக்கம் வீரசிம்மனுக்கு இருக்கவே செய்தது. அப்பொழுது வீரமுரசு ஒலிக்கலாயிற்று. முரசறைவோனின் குரலைக் கேட்கலானான் வீரசிம்மன்.

''இதனால் சகலரும் அறியும்படி சொல்வதென்னவென்றால், நமது மதிப்புக்கும் பெருமைக்கும் உரியவரான பராக்கிரம பாகு மன்னவர், நாளைக்கு வெற்றி விழா கொண்டாடப் போகிறார். வெற்றி விழாவிலே பன்னிரண்டு போட்டிகள் இருக்கும். பன்னிரண்டு போட்டிகளிலும் யார் வெற்றி பெறுகிறாரோ, அவர் சுத்த வீரர் என்று பாராட்டப் படுவார். அதுமட்டுமல்ல, வெற்றிவீரர் தமது வீரத்தின் பரிசாக எதை வேண்டுமானாலும் மன்னவரிடம் கேட்டுப் பெற்றுக் கொள்ளலாம்'' என்றான் காவலாளி.

விரும்பிய பரிசு என்ற வார்த்தைகள் ஓர் வழியைத் திறந்து விட்டன. அவன் முகம் சட்டென்று மலர்ந்தது.

''தேவி! நான் ஓர் முடிவுக்கு வந்து விட்டேன். நாளை நடைபெறப்போகும் வெற்றி விழாப் போட்டிகளில் நானும் பங்கு கொள்ளப் போகிறேன்.''

''போட்டிகள் பலமானதாக இருக்குமே!''

''இருக்கட்டுமே! இந்த வீரசிம்மனின் வீரத்தைச் சந்தேகிக்கிறாயா?''

''இல்லை, உங்களது வீரத்தை என் உயிரினும் மேலாகக் காதலிக்கிறேன்.''

அப்பொழுது ஆள் அரவம் கேட்கவே அவர்கள் திரும்பினார்கள். கவிஞர் தருமசேனர் போய்க் கொண்டிருந்தார். இனியும் அங்கு தாமதிப்பது உசிதமாகாது எனக் கண்ட வீரசிம்மன் ''தேவி! நாளை வெற்றி விழாவிலே உன்னைச் சந்திக்கிறேன்'' என்று கூறிவிட்டு வெளியேறினான்.

அரண்மனைச் சபா மண்டபத்தில் எள் போட்டால் கூட விழாதவாறு மக்கள் கூடியிருந்தார்கள். அரியணையிலே மன்னவன் பராக்கிரமபாகு வீற்றிருந்தான். அவனுக்குப் பக்கத்திலே கவிஞர் தருமசேனர் அமர்ந்திருந்தார். மறுபக்கத்திலே மன்னவன் மனைவியும், லோகநாத தேவியும், ராஜகுமாரனும் வீற்றிருந்தார்கள்.

விழா ஆரம்பமாக வெற்றி முரசு ஒலிக்கலாயிற்று. முரசின் ஓசை அடங்கவும், மன்னவன் ''விழாப் போட்டிகள் ஆரம்பமாகட்டும்'' என்றான். மறுகணம் போட்டிகள் ஆரம்பமாகிவிட்டன.

ஒன்று, இரண்டு என்ற வகையிலே போட்டிகள் நடந்து கொண்டிருந்தன. பதினொரு போட்டிகள் முடிவாகியது. பதினொரு போட்டியிலும் வீரசிம்மன் வெற்றி பெற்றான்.

பன்னிரண்டாவது போட்டி மிகவும் கடினமாகவே இருந்தது. என்றாலும் வீரசிம்மன் அதிலும் வெற்றி பெற்று விட்டான்.

வெற்றி பெற்ற வீரசிம்மன் மன்னவனிடம் சென்று வணக்கம் செலுத்தி நின்றான்.

''இணையற்ற பாண்டிய வீரனே! உனது வீரத்தைப் போற்றுகிறேன். போர்க்களத்திலும் உனது வீரத்தைக் காண முடிந்தது. அதனைக் காட்டிலும் பன்மடங்கு சிறப்பாக இன்று உனது வீரத்தைக் கண்டேன். வீரத்தின் பேரினால் என்ன பரிசு வேண்டுமானாலும் கேள்!'' என்றான் மன்னவன்.

''எது கேட்டாலும் கொடுப்பீர்களா...?''

''ஈழ மன்னனைச் சந்தேகிக்கிறாயா? உனது வீரத்தின் வீரப் பரிசைக் கேள். எதுவானாலும் கேள். உனக்கு இந்த அரசிருக்கை வேண்டுமா?''

''அதொன்றும் வேண்டாம், மன்னவா! எனது வீரத்தின் பரிசாக உங்கள் மகள் லோகநாததேவியைக் கேட்கிறேன்.''

''என்ன, என் மகளையா?'' என்று மன்னவன் அதிசயித்தான்.

''வீரசிம்மரே!'' என்ற இடி போன்ற குரல் ஒலியைக் கேட்டுத் திடுக்கிட்டு நோக்கினான் வீரசிம்மன். லோகநாத தேவியின் சகோதரன் – இராஜகுமாரன், இருக்கையை விட்டெழுந்தவாறு, ''நீர் இணையற்ற வீரராக இருக்கலாம். பன்னிரண்டு போட்டிகளிலும் வெற்றி சூட்டி யிருக்கலாம். ஆனால் என் தங்கையைக் கேட்பதெனில், முதலில் என் வாளுக்குப் பதிலிறுக்க வேண்டும்'' என்றான்.

''இதோ நானும் தயார்'' என்றவாறு வீரசிம்மன் வாளை உருவியவாறு குதித்தான். மற்றவர்களுடைய கட்டளை பிறப்பதற்கிடையில் இருவருக்கும் பலமான வாட்போர் மூண்டு விட்டது.

''மன்னவா!'' என்றார் கவிஞர்.

''வீரசிம்மனின் வீரப் பரிசு....''

''நியாயமானது. உங்களிடம் வீரசிம்மன் தங்கள் மகளைத் தரும்படி கேட்டான். உண்மையிலே அவன் தனது காதலியைத் தரும்படிதான் கேட்டான்.''

''என்ன! என் மகள் வீரசிம்மனைக் காதலிக்கிறாளா?'' என்றான் அரசன்.

''ஆம், மன்னவா! லோகநாததேவியிடமே கேட்டுப் பாருங்கள்.''

''நீங்கள் சொல்லும்போது கேட்க வேண்டிய அவசியமில்லை. இதை நீங்கள் ஏன் முன்பே சொல்லவில்லை?''

''சந்தர்ப்பம் ஏற்படும் போதுதானே சொல்ல வேண்டும்? இப்பொழுது சந்தர்ப்பம் வந்தது. உண்மையை வெளியிட்டேன்.''

''வீரசிம்மனின் இணையற்ற வீரத்தை நான் மதிக்கிறேன்'' என்றான் மன்னவன். அப்பொழுது இருசிங்க ஏறுகளின் வாட்போர் ஓர் முடிவுக்கு வந்தது. இளவரசன் தன் வாளை இழந்து தவித்தான். மறுகணம் வீரசிம்மனைத் தழுவியவாறு ''வீரசிம்மரே, சுத்த வீரர் நீர்தான். என் தங்கையை நீர் வீரத்தின் பரிசாகவல்ல, வெறும் பரிசாகவும் கேட்கத் தகுதியுடையவர்!'' என்றான்.

அந்தக் காட்சி மன்னவன் உள்பட அனைவருக்கும் மகிழ்ச்சியை அளித்தது.

''வீரசிம்மா, உன்னைவிடச் சுத்த வீரன் இங்கு இல்லை. உனது பயிற்சியினால் பல நூற்றுக்கணக்கான சுத்த வீரர்கள் இந்த நாட்டில் தோன்ற வேண்டுமென்று விரும்புகிறேன். ஆதலினால் இது முதலாக உன்னைத் தளபதியாக நியமிக்கிறேன்'' என்றான் மன்னவன்.

''நன்றி, மன்னவா!'' என்றான் வீரசிம்மன்.

''வீரசிம்மர் வாழ்க! இலங்கைத் தளபதி வீரசிம்மர் வாழ்க'' என்று கோஷமிட்டனர் கூடியிருந்த மக்கள்.

வீரவாளை மன்னனிடம் வாங்கிக் கொண்ட வீரசிம்மன், ''மன்னவா!...'' என்றான்.

''என்ன, வீரசிம்மரே!''

''எனது வீரத்தின் பரிசு...''

''மறந்து விடவில்லை நான். கோட்டைக் காடு மன்னவன் பராக்கிரமபாகு வீரத்திறனுக்கு அஞ்சலி செய்பவன். வீரசிம்மரே! உமது வீரத்தை மதிக்கிறேன். கௌரவிக்கிறேன். போற்றுகிறேன். புகழ்கிறேன். ஒப்பற்ற தனிச் சுத்த வீரர் இந்த இலங்கை நாட்டில் நீர் ஒருவர்தான். உமது வீரத்தின் பரிசாக, எனது மகள் லோகநாத தேவியை இதோ தந்தேன். இந்த வெற்றி விழா, திருமண விழாவாகட்டும்'' என்றான் மன்னவன் பராக்கிரம பாகு.

''வீரமன்னவர் பராக்கிரம பாகு வாழ்க! வீரத்தளபதி வீரசிம்மர் வாழ்க!'' என்ற வாழ்த்தொலியைத் தருமசேனர் எழுப்பினார். அதனைத் தொடர்ந்து மக்கள் பேரொலியாக வாழ்த்தினார்கள்.

# பற்களைப் பரிசுத்தமாக்கும்

# மக்ளீன்ஸ்!

இம் மூன்று கோப்பைகளை பற்கள் என பாவனை செய்வீர்களானால் இவைகளின் வெளிப்புறம் மற்றும் உட்புறத்தைத் தவிர, ஊத்தை சேர்ந்து அபாயகரமான கிருமிகள் வசிக்கும் இடுக்குகளை சுத்தம் செய்வது மிகக் கடினம். பற்களைப் பாதுகாக்க விரும்புவோர், 'லைப்பாயிட்ஸ்'ஸினால் ஏற்படும் அபாயத்தை அறிய வேண்டியது அவசியம்.



**மக்ளீன்ஸ் எளிதில் துலக்க முடியாத பற்களின் இடுக்குகளில் முண்டிப் புகுந்து துலக்குகிறது. எனவே**

## பற்சிதைவைத் தவிர்க்க சிறந்த சாதனமாக இருப்பது மக்ளீன்ஸ் ஒன்றே

பற்களின் மேல் படர்ந்திருக்கும் 'லைப்பாயிட்ஸ்' கலந்த பாசி பார்ப்பதற்கு அசிங்கமாயிருப்பதோடன்றி அபாயகரமானதுங்கூட என்று பல் டாக்டர்கள் நிரூபிக்கின்றனர். 'லைப்பாயிட்ஸை' எளிதில் சுத்தம் செய்ய முடியாது. இவை தவறுமல் சுத்தம் செய்யப்பட வேண்டும். இல்லையேல் இவைகளின் உட்புறத்தில் தங்கும் திராவகச் சத்து பற்களை அரித்தே விடுகின்றது. இத்தகைய 'லைப்பாயிட்ஸை' அறவே அகற்ற ஒரே வழிதான் உண்டு. அதாவது இதை கரையச் செய்ய வேண்டும். 'லைப்பாயிட்ஸை' கரைக்கக் கூடிய விசேஷமான திரவம் மக்ளீன்ஸில் இருப்பதால், வாயில் நுரை கூட்டாமல் மக்ளீன்ஸ் 'லைப்பாயிட்ஸை' லகுவாக ஜாக்கிரதையுடன் துரிதமாக கரையச் செய்கின்றது. பற்களின் சிதைவைத் தவிர்க்க இது மிகவும் முக்கியம்.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை தினந்தோறும் இருமுறை உபயோகியுங்கள். பற்கள் வெண்மையாகவும், ஆரோக்கியத்துடனும் விளங்கும்.




**க்ளோரோபில் சேர்ந்த வகையும் கிடைக்கும்**

MTY-41 TAM

---

**இலங்கை வானொலி வர்த்தக ஒலிபரப்பு மூலம் 41-மீட்டர் பாண்டில் பிரதி திங்கட்கிழமைதோறும் இரவு 8-30 முதல் 9 மணி வரை ஒலிபரப்பப்படும். "[illegible]" என்ற நிகழ்ச்சியை அவசியம் கேளுங்கள்**

# இந்நாட்டு

# ஜனத் தொகையில் 98.34

# சதவிகிதம் பேர்களே

# லோத்ரா வைப்பற்றி கேள்விப்

# பட்டிருக்கிறார்கள்

+ ○ ○ ○ ○ ○ ○ ○ ○ ○

− ○°






லோத்ராவை உபயோகித்த 58·06
சதவிகிதம் பேர்கள் சொல்வது.

★ "மிகவும் நல்ல மருந்து"
★ "நன்றாக குணப்படுத்தும்"
★ "பேஷான மருந்து"
★ "மிகவும் திருப்திகரம்"

## லோத்ரா பெண்களுக்கே!

கேசரி குடீரம் பிரைவேட் லிமிடெட்—மதராஸ் - 14.

தமிழ்நாட்டிற்கு ஏஜண்டுகள் :

**மெஸர்ஸ் சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்,** மேலக் கோபுர வீதி, மதுரை

# படித்துப் பாருங்கள்

## Hygiene of the mouth & teeth

முகத்துக்கு அழகு செய்வது பற்கள். அதிலும் ஆரோக்கியமான நல்ல நிலையிலுள்ள இயற்கையான பற்கள் பல நோய்களைப் போக்குவதற்குப் பெருந் துணையாக இருக்கின்றன. ஆகவே ஒவ்வொருவரும் வாயையும் பற்களையும் சுத்தமாக வைத்துக் கொள்வது எப்படி என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

நல்ல பல் வரிசை வேண்டுமென்றால், அந்தப் பற்களுக்கு அஸ்திவாரமாக அமைந்துள்ள ஈறுகள் உறுதியாக இருக்க வேண்டும்; நல்ல உருப் பெற்றிருக்க வேண்டும். குழந்தைக்கு இந்த உறுதியான அஸ்திவாரத்தை ஏற்படுத்தும் பொறுப்பு தாயைச் சேர்ந்தது. தாய் கருவுற்றிருக்கும் காலத்திலேயே நல்ல ஆரோக்கியமான உணவைச் சாப்பிடவேண்டும். பிறகு குழந்தைகளுக்குத் தாய்ப்பாலே ஊட்ட வேண்டும். குழந்தை தாய்ப்பாலை அருந்தும் காலத்தில்தான், அதன் ஈறுகள் நன்கு படிந்து உறுதி பெறுகின்றன.

டாக்டர் பாலசந்தர் இந்நூலில் குழந்தைகளின் பல்வளர்ச்சிக்குத் தாய்ப்பால் எவ்வளவு அவசியம் என்று நன்கு வற்புறுத்தியிருக்கிறார். குழந்தைக்குச் செயற்கை முறையில் பாலூட்டுவதனால் ஏற்படும் தீங்குகளையும் கூறியிருக்கிறார். நல்ல ஆரோக்கியமான பற்களைப் பெறுவதற்கு, பல் தேய்த்தல், வாய் கொப்புளித்தல், பற்களுக்குப் பயிற்சி யளித்தல் ஆகியவை மிக மிக முக்கியமாகும். இதை இந்நூலாசிரியர் நன்கு வற்புறுத்தியிருக்கிறார். சாதாரண ஆங்கிலம் தெரிந்தவர்கள் கூடப் புரிந்து கொள்ளும் வகையில் இந்நூலாசிரியர் எழுதியிருக்கிறார்.

கிடைக்குமிடம்: என். எஸ். பாலசந்திரன் 7/346 S. M. Street Calicut, விலை: ரூ. 2.

**டாக்டர் எம். ராதாகிருஷ்ணன்**

## அபயாம்பா நவாவரணம்

இந்தப் புஸ்தகம் கல்கத்தாவில் ஸ்ரீ குருகுஹகான வித்தியாலயத்தின் முக்கிய ஆசிரியரான வீணை வித்வான் ஏ. அனந்தகிருஷ்ணையரவர்களால் வெளியிடப் பட்டிருக்கிறது. அவர், இந்தக் கீர்த்தனைகளை இயற்றிய ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரவர்களின் வம்சத்தைச் சேர்ந்த அம்பி தீக்ஷிதர் என்ற முத்துஸ்வாமி தீக்ஷிதரவர்களிடம் சங்கீதம் பயின்றார். ஆகவே, நல்ல முறையில் கீர்த்தனங்களைப் படித்திருக்கிறாரென்று சொல்ல வேண்டியதில்லை. அந்த அம்பி தீக்ஷிதரவர்களிடமே சங்கீதம் பயின்ற நான், இந்தக் கீர்த்தனங்கள் ஸம்ப்ரதாய முறையில் பிரசுரம் செய்யப்பட்டிருக்கிற தென்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். தேவிபக்தராக இருந்த ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரவர்கள் மாயூரத்தில் அபயாம்பா பேரில் 8 விபக்தி (வேற்றுமை)களுக்கு எட்டு கீர்த்தனைகளும், தியான கீர்த்தனை, மங்கள கீர்த்தனைகளும் சேர்ந்து பத்து கீர்த்தனைகள் பாடியிருக்கிறார். அவைகளெல்லாம் இந்தப் புஸ்தகத்தில் அர்த்தத்துடனும், ஸ்வரக் குறிப்புகளுடனும் தரப்பட்டிருக்கின்றன. இவற்றைத்தவிர 'தோடி'யில் கணபதிபரமான கீர்த்தனையும், 'சுத்த தன்யாஸி'யில் ஸுப்ரமண்ய கீர்த்தனையும், மாயூரநாதர் பேரில் 'கேதாரகௌள'த்திலும், 'ஆனந்த பைரவி'லுமாக இரு கீர்த்தனைகளும் மொத்தம் பதினான்கு கீர்த்தனைகள் இதிலடங்கி யிருக்கின்றன. ராகலக்ஷணங்களும் அநுபந்தத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. பூரி ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள் 64 ச்லோகங்கள் இதற்கு முன்னுரையாகச் செய்திருக்கிறார்கள். அவைகளில், பக்தியின் ப்ரபாவத்தையும், ஸ்ரீ தீக்ஷிதரவர்களது சரித்திரத்தின் மகிமையையும், இந்தக் கீர்த்தனங்களுடைய மேன்மையையும், ஸ்ரீ அனந்தகிருஷ்ணய்யரவர்கள் செய்திருக்கும் மகத்தான கைங்கர்யத்தையும் நன்கு விளக்கியிருக்கிறார். இந்தக் கீர்த்தனைகளை ஆவரணக் கீர்த்தனைகள் என்று சொல்வது அவ்வளவு உசிதமல்ல. ஸ்ரீ கமலாம்பா நவாவரணக் கீர்த்தனங்களைப் போல், தேவியின் ஆவரண பூஜையை அநுசரித்து இந்தக் கீர்த்தனங்கள் இயற்றப்பட வில்லை. ஆகவே இந்தக் கீர்த்தனைகளை அபயாம்பா நவாவரணக் கீர்த்தனைகள் என்று சொல்வது உசிதமில்லை.

கிடைக்குமிடம்: குருகுஹகான வித்தியாலயா, 19, பிபின்பால் ரோடு, கல்கத்தா-26. விலை ரூ. 2—8—0.

சுப்ரீம் கோர்ட் நீதிபதி
**டி. எல். வெங்கடராமய்யர்**




"சே! என்ன உலகம் ஐயா, இது! யாரையும் நம்பி எந்தக் காரியத்திலும் துணிந்து பிரவேசிக்க முடியவில்லையே? மனித புத்தியைக் குரங்குடன் ஒப்பிட்டுப் பேசினானே—அவன் வாயில் தேனை ஊற்ற வேண்டும்!" என்று அலுப்புடன் கூறியவாறு உள்ளே நுழைந்த பராங்குசம் என் எதிரில் இருந்த நாற்காலியில் அமர்ந்தார்.

"வாருங்கள்! வீட்டில் தேன் இல்லை. எலுமிச்சம்பழ சர்பத் கொண்டு வரச் சொல்லட்டுமா?" என்று வரவேற்று உபசரித்தேன், என் முதலாளியை.

"அட, நான் சொல்லவில்லை ஐயா, அப்படி! மனிதர்களின் மன இயல்பை ஆராய்ந்து உணர்ந்து முதன் முதலில் இந்த உவமையை வெளியிட்ட வாய்க்குத்தான் சொன்னேன். எனக்கு சர்பத் போதும்!" என்றார், பராங்குசம். அவர் சிரித்தபோதிலும், முகத்திலிருந்து சோர்வு முற்றும் நீங்கிவிடவில்லை.

அறைக்கு வெளியே நின்ற பையனிடம் சர்பத் கொண்டுவரும்படி சொல்லிவிட்டு பராங்குசத்தைப் பார்த்து, "ஏதாவது சொந்த விஷயமா, அல்லது நம் தொழில் சம்பந்தப்பட்டதா?" என்று வினவினேன்.

"சொந்த விஷயமாயிருந்தால் லட்சியமே செய்யப் போவதில்லையே! நம்முடைய புதுப் படத்தில் பின்னணி சங்கீதம் பாடுகிறதாக ஒரு பெண் ஒப்பந்தம் செய்து கொண்டு போனாள் அல்லவா?"

"ஆமாம்; பரிமளா தானே? கதையைப் படித்துப் பார்க்கும்படி அவளிடம் ஒரு பிரதி கொடுக்கச் சொன்னீர்களே..?" என்று நான் இடைமறித்து ஞாபக மூட்டினேன்.

"அவள்தான்! கதையைப் படித்து விட்டு இன்று காலையில் வந்து 'ஒப்பந்தத்தை ரத்து செய்து விடுங்கள்' என்று கெஞ்சுகிறாள். முன்பணமாக வாங்கிய தொகையைக் கூடத் திருப்பிக் கொடுத்துவிட்டாள்!" என்றார் பராங்குசம் மனக்கிலேசத்துடன்.

"இவ்வளவுதானே? எங்கே பணத்தை வாங்கிக் கொண்டு ஓடிவிட்டாளோ என்றல்லவா பயந்துவிட்டேன் நான்?"

"டைரக்டர் சார்! பணம் பறிபோயிருந்தால் கூட அவ்வளவு வருத்தமாயிராது. கண்ணீர் விட்டு அழுது கொண்டு அவள் என் வீடு தேடி வந்து கெஞ்சியபோது எனக்கு எவ்வளவு வேதனையாயிருந்தது, தெரியுமா?"

இதைச் சொல்லும்போதே பராங்குசத்தின் முகத்தில் வேதனையின் சாயல் இலேசாகப் படர்ந்து விட்டது.

பராங்குசம் ஓர் லட்சியவாதி. லட்சாதிபதியுங்கூட. ஈரமுள்ள நெஞ்சு. யாராவது கண்ணைக் கசக்கிக் கொண்டு அவர் எதிரில் நின்றால் தம் இதயமே கசங்குவது போலிருக்கும் அவருக்கு.

பரிமளாவின் கண்ணீர் பராங்குசத்தின் இளகிய நெஞ்சைக் கரைந்துருகச் செய்ததில் வியப்பேயில்லை எனக்கு.

"உங்களுக்கு விருப்பமில்லாவிட்டால் ஒப்பந்தத்தை ரத்து செய்ய முடியாது என்று

சொல்லி விடலாமே? சட்டப்படி....'' நான் கூறி முடிப்பதற்குள் அவர் இடைமறித்து, ''அதுதானே முடியவில்லை! ரொம்பவும் தர்மசங்கடமான நிலையிலிருக்கிறாள் அந்தப் பெண். அவள் கண்ணீரைப் பிரயோகிக்கையில், அவளுக்கெதிராக நான் சட்டத்தைப் பிரயோகிக்க விரும்பவில்லை. சோகம் குடிகொண்டவள் காதல் கீதம் பாட முடியுமா? பாடினால்தான் எதிர்பார்த்த பலன் கிட்டுமா?'' என்று கேட்டுவிட்டு என் முகத்தை ஊடுருவினார் பராங்குசம்.

''அப்படியானால்....''

''நான் ஒப்புக் கொண்டுவிட்டேன். 'மாலையில் காரியாலயத்துக்கு வா! ஒப்பந்தப் பத்திரம் அங்கேதானிருக்கிறது. உன் விருப்பப்படியே ரத்துச் செய்து விடலாம்' என்று சொல்லிவிட்டேன்'' என்றார் பராங்குசம். அவர் குரலில் நிம்மதி தொனித்தது.

அவர் பதிலைக் கேட்டு நான் ஆச்சர்யமடைந்தாலும், அவர் சுபாவத்தை நன்குணர்ந்தவனாதலால் திடுக்கிடவில்லை.

''இந்த ஒப்பந்தத்திலிருந்து தன்னை விடுவிக்கும்படி அவள் கேட்டுக் கொண்டபோது அவள் உதடுகள் கெஞ்சவில்லை; உள்ளம் கெஞ்சியது. அவள் கண்கள் கலங்கியபோது, நெஞ்சே கலங்கியது போல் தானிருந்தது. அவள் மெய்தான் பேசுகிறாள் என்பதை நிதர்சனமாகப் புரிந்து கொண்ட பின்பு நான் வேறு என்ன செய்வது? அவள் பின் வாங்கக் காரணம், நாம் தேர்ந்தெடுத்திருக்கும் கதைதான்!'' என்றார் பராங்குசம்.

அவர் பதில் என்னைத் திடுக்கிடச் செய்தது. ''என்ன! அந்தக் கதையா? கதையில் என்ன குற்றம் கண்டாள் அவள்? அந்தப் பெண் திரையுலகுக்கே புதியவள். கதையைப் பற்றி அவளுக்கென்ன தெரியும்?'' அப்பழுக்கற்ற கதையைப் பற்றிப் பின்னணி இசை வழங்க வந்த ஒரு பெண் குறைவாகப் பேசியதால் ஏற்பட்ட ஆத்திரத்தில் எதிரிலிருப்பவர் என் முதலாளி என்பதையும் சிந்திக்காமல் ஆவேசம் வந்தவன் போல் கத்தி விட்டேன்.

பராங்குசம் சிரித்தவாறு கூறினார்: ''கதையைக் குறை கூறவில்லை அவள். தனக்கும் இந்தப் படத்துக்கும் தொடர்பு வேண்டாம் என்று கதையைப் படித்தபின் அவள் தீர்மானித்திருக்கிறாள் என்பது என் ஊகம். அதிருக்கட்டும்; அந்தக் கதையின் பிரதி ஒன்று வேண்டும் எனக்கு.''

''இப்போதே வேண்டுமா? முழுக் கதையும் வசனமும் காரியாலயத்தில் இருக்கின்றன. அவர் எழுதிக் கொடுத்த கதைச் சுருக்கம் இதோ இருக்கிறது. படிக்கிறீர்களா?'' என்று கேட்டவாறு என் மேஜை டிராயரைத் திறந்து அதிலிருந்த காகிதக் கட்டு ஒன்றை எடுத்துப் பராங்குசத்தினிடம் நீட்டினேன். அவர் ஆவலுடன் அதைக் கையில் வாங்கிக் கொண்டார்.

நான் பராங்குசத்தின் எதிரில் வந்து அமர்ந்தேன். அவர் உரத்த குரலில் அதைப் படித்துக் கொண்டிருந்தார்:

''பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு முறைப்படி சிறப்பாகத்தான் நடந்தேறியது, பார்வதி - பத்மநாபன் திருமணம். தம்பதி இருவருக்குமே அதில் பூரண திருப்தி. பார்வதியின் தகப்பனார் செல்வச் சீமானில்லை; எனினும் பார்வதி அவருக்கு ஒரே பெண்ணாதலின் தம் சக்திக்கு மீறியே செலவழித்து நல்ல இடத்தில் பெண்ணைக் கொடுத்து விட்டதில் மகிழ்ச்சியே அவருக்கு.

பத்மநாபன் சென்னையில் உத்தியோகத்தில் இருந்தான். இருநூறு ரூபாய்க்கு மேல் சம்பளம். பல சஞ்சிகைகளுக்குக் கதை, கட்டுரைகள் எழுதி அவன் பெயர் பிராபல்யமடைந்திருந்தது. அதிகம் படிக்காத குடித்தனப் பாங்கான ஏழைப் பெண்ணையே மணப்பது என்ற அவன் தீவிரமான லட்சியம் பார்வதியை அடைந்ததன் மூலமாக நிறைவேறிவிட்டது.

பெண் பார்க்க வந்தபோதே பார்வதியின் பேரெழிலில் பரவசமாகி விட்டான் பத்மநாபன். அவள் குரல் இனிமையிலே அவன் நெஞ்சம் கிளுகிளுத்தது.

திருமணம் முடிந்த மூன்றாவது மாதம் சென்னையில் தனிக்குடித்தனம் வைத்தனர்.

அன்று பௌர்ணமி. அமுதைப் பொழியும் நிலவில் குளித்து நின்ற பசுமரங்கள் வெள்ளி முலாம் பூசியவைபோலக் காட்சியளித்தன. உள்ளே பார்வதி நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்தாள். புற உலகின் மோகனக் காட்சியில் லயித்தவாறு வராந்தாவில் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த பத்மநாபனின் மனம் ஏதோ கற்பனையில் ஈடுபட்டிருந்தது.

அறைக்குள்ளிருந்து பேச்சுக்குரல் கேட்கவே திடுக்கிட்டுத் திரும்பினான், பத்மநாபன். பார்வதியின் உதடுகள் அசைந்தன. 'தூக்கத்தில் பிதற்றுகிறாள். ஏதோ கனவு போலும்!' என்று தீர்மானித்தவன் 'பார்வதி!' என்று



அழைக்க வாயெடுத்தான். ஆனால் உடனேயே சிரமப்பட்டு அந்த வார்த்தை வெளிவராமல் அடக்கிக் கொண்டு விட்டான். திடீரென்று விழித்துக் கொண்டால், அந்த அதிர்ச்சியால் கட்டிலிலிருந்து உருண்டு கீழே விழுந்து விடுவாளோ என்று தான் மௌனமாகவே அவளை அணுகினான். தெளிவற்ற வார்த்தைகள் சில அவள் உதட்டிலிருந்து உதிர்ந்தன. அருகில் நெருங்கிக் குனிந்து அவள் உதட்டருகில் தன் காதை வைத்துக் கொண்டு கவனமாகக் கேட்டான் பத்மநாபன்.

''பஞ்சாமிக்குத்தான் பார்வதி! பஞ்சாமிக்குத்தான் பார்வதி!...உயிரைக் கொடுத்துக் காப்பாற்றினானே....?'' அவள் உதடுகள் இறுக மூடிக் கொண்டன. தீக்குழம்பைக் கக்கும் எரிமலையின் வாய் அடைத்துக் கொண்டது போலிருந்தது பத்மநாபனுக்கு! வெளுத்த முகத்துடன், செய்வதறியாது ஒரு கணம் அங்கேயே சிலைபோல் நின்றவன், கால்கள் தள்ளாட வராந்தாவுக்கு வந்தான்.

யார் இந்தப் பஞ்சாமி?—அவன் முன்பு விசுவரூபம் எடுத்து நின்ற இந்தக் கேள்விக்கு விடை காணமுடியாமல் தவித்தான் அவன்.

'பட்டிக்காட்டுப் பெண்; பரம சாதுவாயிருப்பாள் என்று நினைத்தேனே? என் வீட்டில் படுத்துறங்கும்போது பஞ்சாமியின் நினைவா? உன்னைப் பார்க்க வந்தபோதே மனத்தைத்திறந்து என்னிடம் சொல்லியிருக்கலாமே? உன்னைப் பலவந்தமா செய்திருக்கப் போகிறேன்! உன் அப்பனிடமாவது சொல்லியிருக்கலாமே? இன்று மாலை விளையாட்டாக...' சிந்தனை தடம் புரண்டது.

மாலையில் அவன் வீடு திரும்பியதும் காப்பியுடன் மாடிக்கு வந்தாள் பார்வதி. அவள் கையைப் பற்றி இழுத்து, 'பாரு! இப்படி வந்து உட்கார்! உன்னை ஒன்று கேட்கப் போகிறேன். ஒளிக்காமல் சொல்லவேண்டும்!' என்று கொஞ்சினான் பத்மநாபன்.

'அவ்வளவு ரகசியமா? காதோடுதான் சொல்ல வேண்டுமாக்கும்!' என்று கூறிச் சிரித்தாள் பார்வதி.

'ஆமாம்; நான் உன்னைப் பெண் பார்க்க வந்தேனே! அதற்குமுன்பு யாராவது உன்னைப் பார்க்க வந்ததுண்டா?'

'என்ன கேள்வி இது?'

'சொல்லேன்!'

'என்ன சொல்லுவது?'—முகம் சிவந்து விட்டது அவளுக்கு.

'விளையாட்டாகத்தான் கேட்டேன், பாரு! பெண் பார்க்கவென்று முதன் முதலில் நான் கிளம்பியது உன்னைப் பார்க்கத்தான். அழகுக்கு முற்றுப்புள்ளி வைத்ததுபோல நீ வந்து எதிரில் நின்றாய். முதல் முயற்சியிலேயே என் லட்சியம் கைகூடி விட்டது. அதைப்போல நீயும்...' மேலே என்ன சொல்லுவதென்று தெரியாமல் சிறிது தயங்கினான்.

'தங்கள் லட்சிய சித்தி, என் பாக்கியம்!'—குறும்பு தவழ்ந்தது அவள் முகத்தில்.

'நீ பதில் சொல்லமாட்டாயே?'—எழுந்து அவளை நெருங்கி அசட்டுக் கோபத்துடன் கேட்டான் அவன்.

காலியான காப்பிப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு அவன் பிடிக்கு அகப்படாமல் கீழே ஓடிவிட்டாள் பார்வதி.

நினைவு மீண்டும் வேதனையில் தோய்ந்தது. அருகிலிருந்த மண் கூஜாவிலிருந்து ஒரு டம்ளர் குளிர்ந்த ஜலத்தைப் பருகினான்.

பார்வதி! 'பாதகி' என்பதுதான் பொருந்தும்! என்ன சாகஸம்! நான்தான் முதன் முதலில் அவளைப் பார்க்க வந்தேன் என்று என்ன துணிச்சலுடன் புளுகினாள்? மனத்தில் பஞ்சாமி; உதட்டில் பத்மநாபனா?—நினைவின் சூடு, அவன் குடித்த தண்ணீரையும் வெந்நீராக மாற்றி விட்டது. திணறித் திக்கு முக்காடினான் பத்மநாபன்.

கட்டிலில் புரண்டு படுத்தாள் பார்வதி. அவள் முகம் சலனமற்றிருந்தது.

நொந்த இதயத்துக்குச் சமாதானம் கூற வழி தெரியாமல் வராந்தாவுக்குப் போய்த் தரையிலேயே படுத்துக் கொண்டான் அவன்.

'உம்; போய் எழுப்பு அவளை. நேருக்கு நேர் உன் சந்தேகத்தைக் கேட்டுத் தீர்த்துக் கொண்டுவிடு. மனதுக்குள்ளேயே மறுகிக் கொண்டிருப்பதில் பயன்?'—மனம் அவனை உந்தித் தள்ளியது.

'ஸ்பஷ்டமாக என் காதால் கேட்டதை நம்பாமல், புதிதாக அவளைக் கேட்டு இன்னும் என்ன தெரிந்து கொள்ள வேண்டும்? ஒருகால் அவள் உண்மையை ஒளிக்காமல் சொல்லி விட்டால்...அந்த உண்மை- அவளுக்கும் பஞ்சாமிக்குமிடையே உள்ள உறவை நிலை நிறுத்தி விட்டால்...?—நெஞ்சு பொசுங்கிக் கொண்டிருந்தது. சிந்தனையின் சிக்கல்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள அவன் முயன்றதெல்லாம் வீண்தான்!

காலையில் அவன் எழுந்தபோது கண்கள் 'ஜிவு ஜிவு' என்று சிவப்பேறியிருந்தன.

''வராந்தாவிலேயே படுத்துக் கொண்டு விட்டீர்களா, என்ன? இராத்திரி ரொம்ப நேரம் கண் விழித்து எழுதிக் கொண்டிருந்தீர்களோ?'' என்று கேட்டாள் பார்வதி.

அவன் பதிலே கூறாமல் வெளியே சென்று விட்டான். என்ன பதில் சொல்லுவது? சிரிப்புத்தான் வந்தது அவனுக்கு! 'என்ன பரிவுடன் விசாரிக்கிறாள்! இரவில் நடந்தது ஒன்றுமே தெரியாததுபோல் அல்லவா கேட்கிறாள்?...கனவில் பிதற்றியது எப்படி ஞாபகமிருக்கும்? உடனேயே மறந்திருக்குமே?... கனவில் அந்தப் பஞ்சாமி ஏன் தலைகாட்ட வேண்டும்? யார் அந்தப் பஞ்சாமி?' மீண்டும் அதே குழப்பம், சிந்தனை. அன்று அவன் காரியாலயத்துக்குச் சென்றானே தவிர வேலையே ஓடவில்லை. ஓட்டல் சாப்பாடும், கசப்பான நினைவுகளும் அவன் வயிற்றையும் மனத்தையும் குமட்டி வேதனைக்குள்ளாக்கின. 'உன் அப்பாவுக்குத் தந்தியடித்திருக்கிறேன். அவர் வந்ததும், சாமான்களை எடுத்துக் கொண்டு வீட்டைக் காலி செய்துவிட்டு நீ போய் விடலாம். உடைந்த கண்ணாடியைக் கூட உருக்கி ஒட்டிவிடலாம். உள்ளம் உடைந்தால், உடைந்ததுதான்!—பத்மநாபன்'—வேலைக்கு ராஜிநாமா எழுதிக் கொடுத்து விட்டு வீடு திரும்பியவன் தன் துணிமணிகளைப் பெட்டியில் திணித்து எடுத்துக் கொண்டு,






அவனைப் பொறுத்த மட்டிலும்
கவலையே வேண்டாம்.
ஏனெனில் அவன்

# லாக்டோஜனில்

வளருகிறான்.

"லாக்டோஜன்" ஹிந்தி புரோகிராமைக் கேளுங்கள்
ரேடியோ ஸிலோன் 41 மீடர் பாண்டு
பிரதி ஞாயிறுதோறும் இரவு 7-45 மணியிலிருந்து 8 வரை
பிரதி வியாழன்தோறும் இரவு 8-30 மணியிலிருந்து 8-45 வரை
விவரங்களுக்கு எழுதவும்:-
நேஸில்ஸ் பிராடக்ட்ஸ் (இந்தியா) லிமிடெட்,

| | | |
|---|---|---|
| த. பெட்டி நெ. 396 | த. பெட்டி நெ. 315 | த. பெட்டி நெ. 180 |
| கல்கத்தா | பம்பாய் | மதராஸ் |

இப்படி ஒரு கடிதம் எழுதிப் பார்வதியின் கண்ணில் படும்படி வைத்து விட்டு அன்றிரவே கிளம்பி விட்டான்.

அவன் கடிதத்தைப்படித்ததும்? பார்வதிக்கு இதயம் ஆயிரமாயிரம் சுக்கல்களாக உடைந்து சிதறியது. காரணம் புரியாமல் கலங்கினுள்.

அடுத்த நாள் அவன் தகப்பனுர் வந்தார். அவர் கேட்டதற்கும் சரியான பதில் எதுவும் கூற முடியாமல் தவித்தாள்.

'இதென்ன ஆச்சரியமா யிருக்கிறதே! ஒரு காரணமுமில்லாமல் ஒருவன் இப்படி வீட்டை விட்டு ஓடுவானு? கடன்காரனுக்குப் பயந்து ஒளிந்து கொள்ளுகிறவர்களும், தற்கொலை செய்து கொள்ளுகிறவனுமல்லவா இப்படித் துண்டுக் கடிதம் எழுதிவிட்டு மறைந்து கொள்ளுவார்கள்? இவனுக்கென்ன வந்தது? விளக்கமாக எழுதியிருந்தாலாவது ஒரு பரிகாரம் தேடலாமே?' என்று புலம்பினுர்.

பெண்ணை அழைத்துக் கொண்டு கிராமத்துக்குத் திரும்பியவர் அதே ஏக்கத்தில் படுத்த படுக்கையானுர். இடையில் ஒரு தடவை பத்மநாபனின் தகப்பனுரைப் போய்ப் பார்த்து விட்டுத் திரும்பினுர். அவர் கூறிய தகவல், ஏற்கனவேயே நலிந்து போன அவர் உள்ளத்தை மேலும் வேதனைக்குள்ளாக்கியது.

'எனக்கும் விவரமாக அவன் எதுவும் எழுதவில்லை. தன் விலாசத்தைக்கூட அவன் தெரிவிக்க வில்லை. நான் வற்புறுத்தி அவனை மீண்டும் திரும்பி வரச் செய்வேனு என்ற காரணத்தால் போலும்! ஆனுல்.. உங்கள் பெண்ணின் நடத்தையில் அவனுக்கு ஏதோ சந்தேகம்!'—பத்மநாபனின் தகப்பனுர் இவ்வளவுதான் கூறினுர். இது போதாதா? சம்பந்தி வீட்டிலிருந்து திரும்பியவர், அதே ஏக்கத்தில் ஆறு மாதங்களுக்குள் உயிரை விட்டு விட்டார்!..''

இதுவரை நிறுத்தாமல் படித்துக் கொண்டு வந்த பராங்குசம், ''நான் இப்போது அவசரமாக வீடு திரும்ப வேண்டும். இன்று மாலை நான்கு மணிக்கு நீங்கள் காரியாலயத்துக்கு வரவேண்டும். நீங்கள் மட்டும் வந்தால் போதாது. இந்தக் கதையை எழுதினுரே, 'பத்மம்'—அவரையும் அழைத்துக் கொண்டு வரவேண்டும். உம்! ஒரு முக்கிய சமாசாரம். அந்தப் பெண் பரிமளாவும் அதே சமயத்துக்கு அங்கு வருகிருள். அதைப் பற்றி நீங்கள் ஆசிரியரிடம் எதுவும் பிரஸ்தாபிக்க வேண்டாம்'' என்று கூறிவிட்டுப் பராங்குசம் என் வீட்டிலிருந்து வெளியேறினுர்.

★

நானும் கதாசிரியர் 'பத்மம்' அவர்களும் காரியாலயக் கட்டடத்தின் வாசலில் காரை விட்டு இறங்கிய போது உள்ளே யிருந்த கடிகாரம் நான்கு முறை ஒலித்தது. முதலாளியின் அறைக்குள் பேச்சுக் குரல் கேட்கவே இரு பிரம்பு நாற்காலிகளை எடுத்து வந்து அறையை யொட்டிப் போட்டுவிட்டு இருவரும் அமர்ந்து உள்ளே நடக்கும் சம்பாஷணையைச் செவி மடுக்கலானேம்.

பெண் குரல் தெளிவாகக் கேட்டது:

''இந்தக் கதையைப் படித்த பிறகு என் மனம் மாறியது ஆச்சரியமாயிருக்கும் உங்களுக்கு. ஆனுல், அது துடிதுடித்தது எனக்கு மட்டுந்தான் தெரியும்! தன்னுடைய சொந்த வாழ்க்கையையே — வாழ்க்கையில் நிகழும் விபரீத சம்பவங்களையே, பாட்டாகப் பாட யாருக்குத்தான் மனம் வரும்? நடக்கக்கூடிய காரியமா, அது? படம் வெளி வந்ததும் பலர் என் பாட்டைப் புகழ்ந்து பேசுவார்கள். என் நைந்த இதயம் கிலேசத்தால் படபடக்கும். இன்னெரு உள்ளம்...அதன் போக்கை நிர்த்தாரணம் செய்ய இப்போது எனக்கு ஆற்றலில்லை. ஆனுல் அதுதான் என் கவலை.

கதை முழுவதையும் நான் படிக்க வேண்டும் என்று உங்கள் டைரக்டர் வற்புறுத்திக் கூறிய போது, பின்னணி கீதம் பாடப் போகிற எனக்கு, கதை முழுவதும் படிக்க வேண்டிய அவசியம் புலப்படவில்லை. 'கதை தெரிந்திருந்தால்தான் பாட்டிலும் பாவம் தொனிக்கும்' என்று அவர் காரணம் கூறினுர். அது எப்படி யிருந்த போதிலும், எனக்கு அது ஒரு பெரிய உதவியாகவே முடிந்தது. இம்மாதிரி நான் ஒரு தீர்மானத்துக்கு வர முடிந்ததே. அதுவே ஒரு நன்மைதானே?

கதையின் அடிப்படையான 'சந்தேகம்' என்ற அம்சம் பொதுவாகப் பலருடைய வாழ்க்கையில் நிகழக்கூடியதாயினும், குறிப்பிட்ட சம்பவம் யாருடைய கற்பனைக்கும்

## பரம ரகசியம்!



அப்பாற்பட்டது. என் வாழ்வுக்கு எமனாக வந்தது அது! ஆனால் அதன் உண்மை சொரூபம், இந்தக் கதையின் மூலம்தான் எனக்குத் தெரிய வந்தது. ஆசிரியரின் இயற் பெயரையும் விலாசத்தையும் தங்கள் காரியா லயத்தில் கேட்டுத் தெரிந்து கொண்டேன். இப்போது, இங்கே வருவதற்கு முன், அவர் வீட்டுக்குத்தான் போய் விட்டுத் திரும்பு கிறேன். அவர், நான் போய்ச் சேருவதற் குப் பத்து நிமிடங்கள் முன்புதான் டைரக்ட ருடன் வெளியே கிளம்பியதாகத் தெரிந்தது. ஏமாற்றத்துடன் வந்தேன். என் மனத்தைச் சங்கடத்துக்குள்ளாக்கும் ஒரு விஷயத்தை மட்டும் அவருக்குத் தெரியப்படுத்திவிட விரும்புகிறேன். அப்போதுதான் என் மனம் நிம்மதி யடையும்''—அவள் பேசி நிறுத்தி னாள். ஆகா! அந்தக் குரலில்தான் எவ்வளவு இனிமை இருந்தது! பேசுவதே இசையாக ஒலித்தது என் செவிகளில்.

உள்ளே போக எழுந்தார், 'பத்மம்'. மறு படியும் அவரைக் கையமர்த்தி உட்காரச் சொல்லிவிட்டுச் சம்பாஷணையில் கவனத்தைத் திருப்பினேன். மனமின்றி உட்கார்ந்து கொண்டார் பத்மம்!

''உங்கள் பள்ளிக்கூட மானேஜர் முதல் நான் உன்னைப் பற்றி பிரஸ்தாபித்தபோது 'பார்வதி' என்றுதான் குறிப்பிட்டார். அதனால்தான் என் சந்தேகம் ஊர்ஜிதமாகி யது. பரிமளா என்று நீ கையெழுத்திட்ட பிறகும், நீ பார்வதிதான் என்பதை என்னால் நம்பாமலிருக்க முடியவில்லை. ஆமாம், பத்ம நாபன்—உங்கள் கணவர் இப்போது இங்கே வந்தால் நீங்கள் அவரிடம் எப்படி நடந்து கொள்வீர்கள்?''—பராங்குசத்தின் கட்டைக் குரல் நன்றாகக் கேட்டது.

''அது அவர் தீர்மானிக்க வேண்டிய விஷய மல்லவா? நான் அவர் மனைவி. என்னை ஏற்றுக் கொள்வதும், புறக்கணிப்பதும் அவர் விருப்பம். என்றென்றும் அவர் விருப்பப்படி நடக்க வேண்டியவள் நான்!'' — பரிமளா என்ற பார்வதிதான் பேசினாள்.

''படா உலகம் பொல்லாததாயிற்றே? அப் படித்தான் உலகம் நினைக்கிறது! மீண்டும் கணவனுடன் வாழ விருப்பமுள்ள நீங்கள் இதில் பிரவேசிக்கத் துணிந்தது எப்படி அம்மா?'' என்று பராங்குசம் மிகுந்த கனிவோடு கேட்டார்.

''என்று என் கணவர் என்னை உதறிவிட்டுப் போனாரோ, அன்றே என் கௌரவம் குலைந்த தாகத் தோன்றிவிட்டது எனக்கு. என் கல் யாணத்தின்போதும் அதன் பிறகும் ஏற்பட்ட கடனையடைக்க நிலத்தை விற்க வேண்டிய தாயிற்று. என் தாயார் நோயாளியானதும் குடும்ப நிர்வாகம் என் தலையில் சுமந்தது. வேலைக்குச் செல்லவே முதலில் விரும்பவில்லை நான். அவசியத்தை முன்னிட்டு அதை ஏற் றுக் கொண்டேன். அதுவும் பெண்பாடசாலை யில் வேலை கிடைத்ததால்தான். எங்கள் மானேஜர் என்னைத் தம் சொந்த மகளைப் போலவே பாவித்து வருகிறார். என் அம்மா வுக்கு டி.பி. வியாதி. வருகிற சம்பளம் அன்றா டக் காலட்சேபத்துக்குத் தான் சரிக்கட்டி வரு கிறது. மருந்துக்கும் புஷ்டியான ஆகாரத் துக்கும் வழி? கையில் பணமிருந்தால் மானே ஜரே கொடுத்து உதவுவார். ஆனால் அவ ருக்கு மனம்தான் இருந்தது. பணமில்லை. இந்த நிலைமையில் அவர் கூறிய யோசனையை ஏற்றுக் கொள்ளுவதுதான் விவேகம் என்று தோன்றியது எனக்கு'' என்றாள் பார்வதி.

பராங்குசம் தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேசினார்: ''இன்னும் ஒரே ஒரு சந்தேகம் எனக்கு. அதைக் கேட்கும் உரிமை கூட எனக்கில்லை. அதற்கு அருகதையுள்ள வர், உன் கணவர் ஒருவர்தான். ஆயினும் நீ பதில் சொல்லுவாய் என்ற நம்பிக்கை யினால் கேட்கிறேன். அன்று கனவில்...பஞ்சா மியைப் பற்றி நீ...''

அவர் தயக்கத்தைப் புரிந்து கொண்ட பார்வதி பதிலளித்தாள்:

''இவ்வளவு நேரம் இதை நீங்கள் கேட் காமலிருந்ததுதான் ஆச்சரியமா யிருக்கிறது எனக்கு! என்னுடைய எட்டாவது வயதில் நடந்த சம்பவம் அது. அன்று கார்த்திகை ஞாயிறு. காவிரியில் நீராட ஏராளமான கூட்டம். என் பெற்றோருடன் நானும் போயிருந்தேன். பஞ்சாமியும் வந்திருந்தான். அப்போது பதினாறு வயதிருக்கும் அவனுக்கு. எதிர் வீட்டுப் பையன் அவன். அப்பாவின் கையைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டு நீரில் மூழ்கினேன். கை நழுவி விட்டது. நீரில் மூழ்கிச் சாகவேண்டிய என்னை, அன்று பஞ்சாமி நீந்தி வந்து கரையில் இழுத்துப் போட்டான், குற்றுயிராக. பெரியவர்கள் அன்று முதல் விளையாட்டாக, 'நீதானே பார்வதியைக் காப்பாற்றினாய்? உனக்குத் தான் அவள்!' என்று கேலியாக எங்கள் இருவரையும் பிணைத்துப் பேசி வந்தனர். ஆனால் அது நடந்த ஆறாவது மாதம் அவன் டைபாய்டு ஜுரத்தில் போய் விட்டான். அந்தச் சம்பவம் என் மனத்தை விட்டு அகலவேயில்லை. கல்யாணம் என்றால் என்ன, அது எதற்கு என்பதொன்றும் தெரியாத வயதில் நிகழ்ந்த ஒரு சம்பவம் என் வாழ் வையே குலைத்ததுதான் விசித்திரமா யிருக் கிறது!'' பார்வதியின் குரல் கம்மியது.

மீதி வரலாற்றையும் தெரிந்து கொண்டு விடலாம் என்ற நோக்கத்துடன் நான் என் அருகிலிருந்த கதாசிரியரின் கையைப் பற்றி அமரச் செய்த முயற்சி பலிக்க வில்லை. ஆவேசம் வந்தவர்போல் என் கையை உதறி விட்டு எழுந்தவர், ''பார்வதி!'' என்று அலறிய வண்ணம் உள்ளே நுழைந்தார்.

''எனக்குப் புரிந்து விட்டது, பாரு! நீ மேலே சொல்லத் தேவையில்லை. மனத்தில் எழுந்த சந்தேகத்தை நேரில் வெளிப்படை யாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளாதது என் பிசகு!'' பத்மநாபன் பார்வதியின் கைகளை இறுகப் பற்றியவாறு தழதழத்த குரலில் பேசினான்.

அவன் கைகளை உதறவில்லை அந்த குணக் கொடி! அவள் கன்னங்களில் படிந்திருந்த உவர்க் கோடுகளை நனைத்தவாறு ஆனந்தக் கண்ணீர் பெருகி வழிந்தது. 'ஏழை அழுத கண்ணீர்' திரைப்படமாக வெளி வந்தபோது, அதில் பரிமளா என்ற பார்வதி பாடினாளா என்பதைப் பற்றி என்ன கவலை நமக்கு?



# ஆயுத பூஜை

பாண்டிய நாட்டில் ஒரு நல்ல ராஜா இருந்தான்.

நவராத்திரி வந்தது. ஆயுத பூஜை நடத்தினான். வில்லும், அம்பும், கத்தியும், சூலமும், கலப்பையும், மண்வெட்டியும், சுத்தியும், உளியும், அரிவாளும், ரம்பமும், கோடாலியும், ராட்டையும், தறியும் இன்னும் எல்லாக் கருவிகளையும் ஆயுதங்களையும் தங்கள் தங்கள் தொழிலுக்குச் சேர்ந்தவைகளை அவரவர்கள் கொண்டு வந்து வைத்தார்கள்.

அரசன் பெரிய பூஜை செய்ய ஏற்பாடுகள் செய்தான். பூஜைக்குப் பிராமணர்கள் தங்கள் ஓலைச் சுவடிகளையும் கொண்டு வந்து வைத்தார்கள். செருப்புத் தைப்பவர்களும் தங்கள் சாமான்களைக் கொண்டு வந்து வைத்தார்கள்.




ரஜி.



அரமனையில் ஒரு மூலையில் ஒரு விளக்கு மாறு துக்கத்தோடு சுவரில் சாய்ந்து கொண்டிருந்தது.

"ஏன் விளக்குமாறே! ஒரு மாதிரியாக இருக்கிறாய்? நவராத்திரி பூஜைக்காக அரமனை யெல்லாம் சுத்தம் செய்து களைத் துப் போனாயா?" என்று கேட்டாள் ராஜகுமாரி. அவள் மிக நல்ல பெண்.

"இல்லை, தாயே! எனக்கு வேலை செய் வதில் ஒரு சலிப்பும் கஷ்டமுமில்லை. எல்லா ஆயுதங்களும் கருவிகளும் பூஜைக்கு வைத்திருக்கிறார்கள். என்னை மட்டும் மறந்து விட்டார்களே! இதுதான் என் துக்கம்" என்றது விளக்குமாறு.

"ஐயோ பாவம்!" என்று ராஜகுமாரி பரிதாபப்பட்டு, பூஜை யிடத்துக்குச் சென்றாள்.

"விளக்குமாறு, முறம் ஏன் இங்கே பூஜைக்கு வைக்கப்படவில்லை? அவற்றை யும் கொண்டு வந்து வையுங்கள்" என்று சேவகர்களிடம் சொன்னாள்.

அவர்கள் அரசனிடம் போய் இதைப் பற்றிக் கேட்டார்கள்.

அரசன், "தொழிலில் ஏற்றத்தாழ்வு இல்லை என்பது சாஸ்திரமல்லவா? குருக் களைக் கேட்கலாம். அவரை அழைத்து வாருங்கள்" என்றான்.

குரு வந்தார். அவர் முதலில் கொஞ்சம் தயங்கினார். இப்படியும் அப்படியும் சொன்னார்.

"புஸ்தகத்தைப் பார்த்துச் சொல் லுங்கள்" என்றான் அரசன்.

குருவும் ஏட்டைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தார்.

பிறகு, "ராஜகுமாரி சொல் லுவது சரியே. மக்களுக்குப் பயன்படும் எந்தத் தொழி லும் அதற்கு உபயோகப்படும் எந்தக் கருவியும் பூஜைக் குத் தகுந்தது" என்றார்.

முறத்துக்கும் விளக்கு மாறுக்கும் பூஜை நடக்க வேண்டுமென்று உத்தரவு பிறந்தது. அரசனுடைய கட்டளைப்படி மந்திரியும் அதி காரியும் போய் அவற்றை யும் எடுத்து வந்து ஆயுத பூஜையில் வைத்தார்கள்.

தேவி சந்தோஷப்பட்டாள். அன்று முதல் பல காலம் பாண்டி ராஜாவினுடைய நாட்டில் எந்த மூலையிலும் அழுக்கு, தூசி என்பது இல் லாமல் சுத்தமாக இருந்தது.



# எவ்வித வாஹனம்* மற்றும் டிராக்டருக்கு* ஏற்றதொரு ஓக்ஸ் பாட்டரி இருக்கிறது




அவற்றின் விசேஷ அம்சங்கள்

**அதிகப்படியான உறுதி**

நீடித்த உழைப்பிற்குக் கடினமான ரப்பர் கேஸில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது.

**அதிகப்படியான மின்சார சக்தி**

அதிகப்படியான மின்சார சக்தி அளிக்கும் பைபர் க்ளாஸ் ஸெப்பரேட்டர்கள் உள்ளன.

**அதிகப்படியான தாங்கும் சக்தி**

கடின வேலைக்குகந்த பெரிய பிளேட்டுகள் அமையப் பெற்றுள்ளன.

*பெட்ரோல்
அல்லது
டீஸல்

## ஜார்ஜ் ஓக்ஸ் பிரைவேட் லிமிடெட்




இந்தியா முழுவதிலும் அங்கீகரிக்கப்பட்ட போர்ட் வினியோகஸ்தர்கள்

சிறு க்ளின்ஸ் ரோடு, பம்பாய் 4

GO. 3702




# சிறுவனும் நாயும்

“ஜிம்மி! ஓடி வா; நாம் வெளியில் போய் உலாவி விட்டு வரலாம்” என்று கிளம்பினான் சந்துரு. ஜிம்மியும் குதித்துக் கொண்டு அவனுடன் புறப்பட்டது. சந்துருவும் ஜிம்மியும் ஒரு புல்வெளிக்கு வந்தனர். சந்துரு, தான் கொண்டுவந்த பந்தை எடுத்து வெகுதூரம் விட்டெறிந்தான். ஜிம்மி எடுத்து வர ஓடியது. சந்துருவும் ஓடினான். அந்தப் பந்து அங்கு மேய்ந்து கொண்டிருந்த ஒரு கொழுத்த கறுப்புக் காளையின் காலடியில் போய் விழுந்து விட்டது. அந்தக் கொழுத்த காளை தன் கொம்புகளை முன் பக்கம் சாய்த்து ஜிம்மியையும் சந்துருவையும் துரத்தியது.

‘ஐயோ! காளையினிட மிருந்து நாம் எப்படித் தப்புவது?’ என்ற பயத்துடன் ஓட்டமாக ஓடினான் சந்துரு. காளையினிடமிருந்து சந்துருவைத் தப்ப வைப்பது எப்படி என்று யோசித்தபடியே ஓடியது ஜிம்மி. நல்லவேளையாக எதிரில் இரண்டு பிரிவாகக் கிளை விட்டிருந்த ஒரு பெரிய மரம் காணப்பட்டது. ஜிம்மிக்கு ஒரு யோசனை தோன்றியது. மரத்தின் இரண்டு பிரிவுக்கும் இடையே பாய்ந்தது. பின்னால் துரத்தி வந்த காளையும் மரத்துக்கு நடுவே பாய்ந்தது. கொழுத்த காளையானதால் அந்த மரத்தின் கிளைகளுக்கிடையில் அகப்பட்டுக் கொண்டது.

ஜிம்மி சந்தோஷத்தினால் குதித்தது. சந்துருவும் ஜிம்மியும் பந்தை எடுத்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தார்கள்.

சில தினங்களுக்குப் பிறகு, ஒரு நாள் மாலை மறுபடியும் சந்துருவும் ஜிம்மியும் அந்தப் பக்கம் போனார்கள். என்ன ஆச்சரியம்! அங்கே அந்தக் கொழுத்த காளை துரும்பாக இளைத்துப் போய் மரத்தின் இடுக்கு வழியிலிருந்து வெளியே வந்து கிடந்தது!

“அடாடா! நம்மைக் கொல்ல நினைத்த காளை அல்லவா இது?...பாவம்; போனால் போகட்டும். அதற்கு இப்பொழுது நாம் உதவி செய்ய வேண்டும். உயிர் போகும் தருவாயில் பசியோடு நிற்கிறது” என்று எண்ணி ஓடோடியும் போய் அதற்கு நிறையத் தீனி கொண்டு வந்து போட்டான். காளையும் ஆவலோடு தின்றது. சந்துருவுக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. தினமும் ஆகாரம் போட்டு வந்தான். காளை நன்கு தேறி, நடக்கவும் சக்தி பெற்றது.



சாந்தா மிகவும் புத்திசாலி. அவளுடைய வகுப்பில் அவள் தான் எல்லாப் பாடங்களிலும் முதல் மார்க் வாங்குவாள். வாத்தியார் அம்மாவுக்கும் அவளிடம் பிரியம் அதிகம்.

வகுப்பிலிருந்த மற்ற மாணவிகளுக்குக்கூடச் சாந்தாவிடம் அளவற்ற ஆசை இருந்தது. அவள் வீட்டுக்குப் போய் அவள் எழுதும் பாடங்களையெல்லாம் வாங்கிச் சென்று பார்த்து எழுதிக் கொள்ளுவார்கள்.

# சுலோசனாவின் பிசகு

— சுந்தரராஜன் —

வகுப்பில் வாத்தியாரம்மா சாந்தாவைப் பற்றிப் புகழ்ச்சியாகச் சொல்வதைக் கேட்டு மற்ற மாணவிகள் தாங்களும் அவளைப் போலவே நிறைய மார்க்குகள் வாங்க வேண்டுமென்று நிச்சயம் செய்து கொள்வார்கள். முன்னைவிட ஊக்கத்துடன் படிப்பார்கள்.

ஆனால் சுலோசனா மட்டும் சாந்தாவைக் கண்டு பொறாமைப் பட்டாள். அவள் நிறைய மார்க் வாங்கி வருவதைப் பற்றியும், வாத்தியாரம்மா புகழ்வதைப் பற்றியும் அசூயைப்படுவாள்.

எவ்வளவு முயற்சி செய்தாலும் சுலோசனாவால் சாந்தாவைப் போல் முதல் மார்க் வாங்க முடியவில்லை. தன் பாடங்களைக் கவனித்துப் படிப்பதைவிட, சாந்தாவைப் பற்றி எண்ணமிடுவதில் அவள் அதிக கவனம் செலுத்தியதனால்தான் நிறைய மார்க்குகள் வாங்க முடியவில்லை. இந்த விஷயம் அவளுக்கு ஏனோ தெரியவில்லை. எப்படியாவது சாந்தாவை வகுப்பில் அவமானப் படுத்திவிட வேண்டுமென்று சுலோசனா விரும்பினாள்.

* * *

அவர்களுக்கு வருஷப் பரீட்சை வந்தது. மாணவிகளெல்லாம் விழுந்து விழுந்து படித்தார்கள். சாந்தாவும் பரீட்சைக்கு நன்றாகப் படித்தாள் என்பதைக் கூறவேண்டியதில்லை.

அடுத்த நாள் கணக்குப் பரீட்சை நடக்க விருந்தது. சாந்தா தன் அறையில் அமர்ந்து அக்கறையுடன் கணக்கு போட்டுக் கொண்டிருந்தாள். அப்பொழுது சுலோசனா அங்கு வந்தாள்.

சாந்தா அவளை வரவேற்று, ''வா, சுலோ! உனக்கு ஏதாவது கணக்கு சொல்லித்தர வேண்டுமா?'' என்று சகஜமாகக் கேட்டாள்.

சுலோசனா சுற்று முற்றும் பார்த்துவிட்டு, ''சாந்தா! நான் கணக்குப் பரீட்சை கேள்வித் தாள் கொண்டு வந்திருக்கிறேன். ஒருவருக்கும் சொல்லாமல் இருப்பதாக வாக்களித்தால் உனக்கு மட்டும் காட்டுகிறேன்'' என்றாள். அதைக் கேட்டுச் சாந்தா சிறிது நேரம் யோசித்தாள். அவளுக்குப் பயமாக இருந்தது. பின்னால் இந்த விஷயம் வாத்தியாரம்மாவுக்குத் தெரிந்தால் என்ன ஆகும் என்பதை எண்ணியே அவள் நடுங்கினாள். இருந்தாலும், ''சிரமப்படாமல் நூற்றுக்கு நூறு மார்க்



வாங்கலாமே!'' என்ற சபலமும் மற்றொரு பக்கம் அவளுக்கு ஏற்பட்டது.

கடைசியில், ''சரி! நான் ஒருவரிடமும் சொல்லவில்லை. எங்கே கேள்வித்தாள்?'' என்று கேட்டாள் சாந்தா.

சுலோசனாவும் தான் கொண்டு வந்திருந்த கேள்வித் தாளைச் சாந்தாவிடம் கொடுத்து விட்டுப் புறப்பட்டாள்.

''ஏன்? நீ இந்தக் கணக்குகளையெல்லாம் போட்டு விட்டாயோ?'' என்று அவளைச் சாந்தா கேட்டாள்.

''ஹூம்! இதென்ன பிரமாதம். எனக்கு எல்லாம் தெரியும். உனக்கு ஒத்தாசை செய்யலாமென்று தான் எடுத்து வந்தேன்'' என்று அலட்சியமாகப் பதில் சொல்லி விட்டுப் போய் விட்டாள் சுலோசனா.

* * *

வகுப்பில் வாத்தியாரம்மா எல்லோருக்கும் கேள்வித்தாள்களை விநியோகம் செய்தாள். சுலோசனா சாந்தாவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். ''நன்றாக ஏமாறட்டும்! இந்தத் தடவை சாந்தாவுக்குப் பூஜ்யம்தான்!'' என்று முணுமுணுத்துக் கொண்டாள். ஏனென்றால் அவள் சாந்தாவிடம் கொடுத்த கேள்வித்தாள் அவளாகவே தயாரித்ததுதான்!

ஆனால், என்ன ஆச்சரியம்! சாந்தா கேள்வித்தாளைப் பார்த்து விட்டுச் சிறிது கூடக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. ஏமாற்றத்துக்குப் பதில் அவள் முகத்தில் மலர்ச்சியே உண்டாயிற்று.

'மள மள' வென்று கணக்குகளைப் போட்டுக் கொண்டே போனாள்.

பரீட்சை முடிந்து வெளியே வந்ததும் சாந்தா எல்லோரிடமும் சரியான விடைகளைச் சொல்லிக் கொண்டிருந்தாள். சுற்றி யிருந்தவர்கள், ''ரைட்! ரைட்!'' என்று கூச்சலிட்டு அவள் கூறியவற்றை ஆமோதித்தனர். சுலோசனாவுக்குப் பயம் ஏற்பட்டு விட்டது.

சாந்தா தன்னைப் பற்றி வாத்தியார் அம்மாவிடம் சொல்லி விட்டால் என்ன செய்வது? மற்றப் பெண்களுக்குத் தெரிந்து விட்டால் அவர்கள் தம்மைப் பரிகாசம் செய்வார்களே! பிறகு அவர்கள் முன் எப்படித் தலை காட்ட முடியும்? அதற்குள் சுலோசனாவைப் பார்த்து விட்ட சாந்தா, ''அடடா! நீ ஏமாந்து விட்டாய் போலிருக்கிறதே?'' என்றாள். சுலோசனா பதில் சொல்லாமல் தலைகுனிந்தாள்.

சாந்தா தொடர்ந்து கூறினாள்: ''நீ என்னிடம் கொடுத்த கேள்வித்தாள் நான்காம் பாரத்துக்கானது. நமக்கு வேண்டியது மூன்றாவது பாரத்துக்கானதுதானே என்று அதைக் கிழித்துப் போட்டு விட்டேன். நீ கவனிக்கவில்லை போலிருக்கிறது, பாவம்!''

பொருமைக்காரி சுலோசனாவுக்குத் தான் செய்த பிசகு அப்பொழுதுதான் விளங்கியது. கண்களில் நீர் வருமுன்னால் அங்கிருந்து பதில் சொல்லாமல் ஓடிப் போய் விட்டாள்.

அந்த வருஷமும் சாந்தாதான் முதல் மார்க் வாங்கினாள் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.





# வேடிக்கை விளையாட்டு



ஒட்டகங்கள் பாலைவனத்தில் மூட்டைகளையும் மனிதர்களையும்தான் சுமந்து செல்லும் என்பதில்லை. பந்தயத்தில் ஓடும் ஒட்டகங்களும் இருக்கின்றன. 'மேஹரார்' என்ற ஜாதியைச் சேர்ந்த ஒட்டகங்கள் பந்தயத்துக்காகவே வளர்க்கப்படுகின்றன. வட ஆப்பிரிக்காவில் ஒட்டகப் பந்தயங்கள் அடிக்கடி நடைபெறும்.



தாத்தா: பள்ளிக்கூடம் போவதற்கு உனக்குப் பிடிக்கிறதா?

கிட்டு: போகப் பிடிக்கிறது. வரவும் பிடிக்கிறது. நடுவிலே அங்கே உட்கார்ந்து கொண்டிருக்கத்தான் பிடிக்கவில்லை!

**991**

சென்ற வாரக் கணக்குப் புதிருக்கு விடை

169-ஐத் திருப்பி எழுதினால் 961 வரும். அதில் நடுவிலுள்ள எண் 6-ஐத் தலைகீழாக்கி விட்டால் 991 வரும். இதுதான் பெரிய எண்.

இதோ மழை பெய்யும் போது மேலே போவது எது?

(இன்னொரு கட்டத்தில் விடை)

**விடை**





ஒரு காகிதத்தில் மூன்று சதுரங்கள் வரையவும். இந்த மூன்று சதுரங்களை வைத்துக் கொண்டே ஐந்து சதுரங்கள் வரும்படி மாற்றி அமைக்க வேண்டும்.

விடை: அடுத்த இதழில்.



## தேநீர் அருந்தி

## காலையைப்

## புத்துணர்வுடன்

## தொடங்குங்கள்



உங்களுடைய சொந்தப் பிரச்னை எதுவாயிருந்தாலும் சரி . . . காலையை ஒருவித வெறுப்புணர்ச்சியுடன் தொடங்காதீர்கள். புத்துணர்ச்சி யளிக்கும் ஒரு கோப்பை தேநீருக்காக கையை நீட்டுங்கள். நீங்கள் என்னை அருந்தும்போது, உங்களுக்கு தெளிந்த மனப்பான்மையையும், நம்பிக்கை இருந்தால் உங்களால் வெல்லமுடியாத மனிதப் பிரச்னை எதுவுமில்லை என்ற உறுதியையும் அளிக்கின்றேன்.



**நான்தான் Tea** – காலை நேரப் புத்துணர்வின் சின்னம்.





# வாழ்வளித்தவர்

புஷ்பயான்

வேதத்துக்குக் கல்யாணமாகி ஒரு வருஷம்கூட ஆகவில்லை. அதற்குள் அவள் தன் கணவனை இழந்து விட்டாள். அவளுடைய பூவும் மஞ்சளும் பறி போய் இன்று பதினைந்து நாட்களாகி விட்டன. தந்தைக்குப் பாரமாய் இருந்து, அவர் பாரத்தை எப்போது குறைப்போம் என்று ஏங்கி இருந்து, ஒரு வழியாய் விவாகமாகிக் கணவனுடன் புக்ககம் சென்றாள். ஒரு வருஷம்கூட முழுசாக இன்ப வாழ்வு வாழாமல் மறுபடியும் தன் தந்தையின் ஆதரவில் வந்து விழுந்தாள்.

அன்று வேதம் கணவனுக்குச் சாப்பாடு போட்டுவிட்டு, பிற்பகலுக்குச் சிற்றுண்டி செய்து அதைப் பைக்குள் போட்டு, பையை அவனிடம் கொடுத்தாள். பிறகு அவன் ஆபீசுக்குப் போவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சௌம்யநாதன் செருப்பை மாட்டிக்கொண்டு கையில் பையுடன் மாடிப்படியில் கால் வைத்து இறங்கினான். இரண்டு படிகள் கூட இறங்கி யிருக்க மாட்டான். அவனுடைய உடல் நடநடவென்று ஆடியது. கையும் காலும் இழுத்துக் கொண்டன. அப்படியே படியிலிருந்து உருண்டு உருண்டு கீழே விழுந்தான். அவனுடைய வாய் பேச முடியாமல் கோணிப் போய் விட்டது.

வேதம், "ஐயோ...." என்று அலறிக் கொண்டு படியின் தாவிக் குதித்துக் கீழே போய்க் கணவன் உடலைத் தூக்கினாள். அவன் தலையிலிருந்து குபுகுபுவென்று ரத்தம் ஆற்றுப் புது வெள்ளம் போல் குதித்துக் கொண்டு பாய்ந்து கொண்டிருந்தது. இந்தச் சத்தம் கேட்டு வீட்டில் குடியிருந்தவர்கள் ஓடி வந்தனர். அவனுடைய வலிப்பு நீங்கவில்லை. உயிர் பிரிந்தது.

அவளுடைய பரிதாப நிலையைக் கண்டு உள்ளம் உருகினர் எல்லோரும். ஆனால், அந்தத் திருமலாச்சாரியார் மட்டும் சிரித்தார். 'உனக்கு வேண்டும். அகங்காரத்துடன், என்னை மணக்க முடியாதென்று மறுத்து, சிரஞ்சீவியாய் வாழ்வான் என்று நினைத்து வாலிபனான அவனை மணந்தாயே! அவன் இப்போது உன்னை மூலையில் உட்கார வைத்து விட்டானே' என்று நகைத்தார்.

வேதத்துக்கு ஏற்பட்ட வேதனை ஆயிரமாயிரம் தேள்கள் கொட்டியது போன்றிருந்தது. ஆனாலும் அன்று அவள் தன் கணவனிடம் கூறிய வாசகங்களை எண்ணிப் பார்த்த போது அவளுடைய கண்ணீர் வற்றிவிட்டது. அழுவதற்கு அவளால் முடியவில்லை. அவளுடைய வாழ்க்கை நிறைவு பெற்றதாகவே உணர்ந்தாள். ஒரு வருடம்கூடப் பூர்த்தியடையாத அவளுடைய மண வாழ்க்கை நூறு வருட வாழ்க்கையாகப் பரிணமித்தது. அப்படியிருக்க அவள் ஏன் வருந்த வேண்டும்?

வேதவல்லியின் தகப்பனார் சேலம் ஜில்லா தர்மபுரியில் தாலுக்கா கச்சேரியில் ஒரு சாதாரண குமாஸ்தாவாக இருந்தார். அவருக்கு வேதவல்லியுடன் இன்னும் இரண்டு பெண்களும், ஒரு பிள்ளையும் பிறந்தார்கள். வேதம் மூன்றாவது பெண். வேதத்தின் தகப்பனாரான ராமசுவாமிக்குத் தன் குமாஸ்தா உத்தியோகத்தில் கிடைத்து வந்த எண்பது ரூபாய் சம்பளத்தைத் தவிர வேறு ஆஸ்தி ஒன்றும் கிடையாது. ஏதோ பெயருக்கு என்று இருந்த இரண்டு ஏக்கரா பூமியை விற்று முதல் பெண் ரங்கநாயகியின் விவாகத்தை நடத்தினார். அப்போதே பணம் போதாமல் அவருடைய நண்பர் திருமலாச்சாரியாரிடம் கடன் வாங்கினார். ரங்கநாயகிக்கு விவாகமான இரண்டு வருடங்களுக்கெல்லாம் அவளுக்கு இளையவளான பத்மா அடுத்தபடியாக விவாகத்துக்குத் தயாராக நின்றாள். அவளுக்கு எப்படி விவாகம் செய்வது? அது ஒரு பிரச்னையாக வந்து அவரை இரவும் பகலும் வாட்டியது. பணத்துக்கு அவர் எங்கே போவார்?

ராமசுவாமி வரன் தேடிக்கொண்டுதான் இருந்தார். ஒரு வரன் நல்ல இடமாக இருந்தது. பையன் பி. ஏ. படித்து நல்ல உத்தியோகத்தில் இருந்தான். பிள்ளையைப் பெற்றவர்களும் அப்படி ஒன்றும் பிரமாதமாகச் சீர் கேட்டு விடவில்லை. பத்மாவின் அழகு அவர்களை மயக்கிவிட்டது. அதனால் சாதாரணமாகவே எல்லாம் செய்யச் சொன்னார்கள். ஆனால் அந்தக் குறைந்த சீர்களைக் கூடச் செய்ய அவருக்குச் சக்தியில்லையே!

ராமசாமியின் நண்பர் திருமலாச்சாரியார் இப்போதும் உதவுவதற்குத் தாமே முன் வந்தார். ராமசுவாமி நன்றிப் பெருக்குடன் அவர் உதவியைப் பெற்றுக் கொண்டார்.

பத்மாவின் விவாகம் நன்றாக நடைபெற்றது. திருமலாச்சாரியிடம் முன்னிலும் பன்மடங்கு அன்பும் மதிப்பும் ராமசுவாமிக்கும், அவர் குடும்பத்தாருக்கும் உண்டாயின.

*

சில நாட்களுக்கெல்லாம் திருமலாச்சாரியாரின் மனைவி அவரைத் தனியாக விட்டு

விட்டு இவ்வுலகிலிருந்து விடைபெற்றுக் கொண்டாள். திருமலாச்சாரியாருக்கு அளவு கடந்த துக்கமும், ஏக்கமும் உண்டாயிற்று.

அவருடைய வாழ்க்கையில் சிறிது சந்தோஷத்தைப் பரப்பினாள் வேதம். ராமசுவாமியின் மூன்றாவதும், கடைசியுமான வேதத்திடம் திருமலாச்சாரியாருக்குப் பாசம். சதா அவர்களுடைய வீட்டிலேயே கொட்டமடித்துக் கொண்டிருப்பாள் வேதம். திருமலாச்சாரியாரின் மனைவி இறந்தபோது வேதத்துக்கு வயது பன்னிரண்டு. வேதம் அவருக்குச் சமையலில் கூடமாட ஒத்தாசை செய்வாள். திருமலாச்சாரியாரும் அவளுக்குப் பாடங்கள் சொல்லிக் கொடுப்பார்.

காலதேவனின் சுழற்சியிலே நாட்கள் வேகமாகப் பறந்தன. ஒரு நாள் ராமசுவாமி திருமலாச்சாரியாரிடம் வேதத்தின் விவாகப் பேச்சைப் பற்றிப் பிரஸ்தாபித்தார்.

''வேதத்துக்குப் பதினாறு முடிந்து ஆறு மாதமாகி விட்டது. அவளுக்கு விவாகம் செய்ய வேணும். தங்கள் உதவியால் பெரிய பெண்கள் இருவரும் புக்ககம் போய் விட்டார்கள். இவள் கதி என்னவாகிறதோ ?'' என்றார் ராமசுவாமி.

திருமலாச்சாரியார் ஆச்சரியத்துடன், ''அட, வேதத்துக்கு அவ்வளவு வயசா ஆயிடுத்து? நானும் அதைப் பற்றி யோசிக்கவே யில்லையே !'' என்றார்.

மேலும் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். திருமலாச்சாரியாரின் உள்ளத்தில் வேதத்தின் விவாகத்தைப் பற்றிய யோசனை பலமாகப் பிடித்து விட்டது. ராமசுவாமிக்குக்கூட அவருக்கிருந்த அவ்வளவு கவலை இருக்குமோ இருக்காதோ !

அன்று, ''மாமா, நமஸ்காரம் செய்கிறேன். இன்றைக்கு என் பிறந்த நாள்'' என்று அவர் வீட்டுக்கு வந்து அவரை வணங்கினாள் வேதம்.

''சீக்கிரமே கல்யாண ப்ராப்திரஸ்து'' என்று அவர் ஆசீர்வதித்து விட்டு வேதத்தை உற்றுப் பார்த்தார் வாஞ்சையுடன் !

வேதம் அன்று அவள் தகப்பனார் ஆசையோடு வாங்கிக் கொடுத்த நூல் புடவையைக் கட்டிக் கொண்டு லக்ஷ்மி தேவியைப் போலவே விளங்கினாள்.

அவளையே சிறிது நேரம் உற்றுப் பார்த்தவாறு இருந்தார் அவர். அவளுடைய கண்களில் வீசிய ஒளியும், உடலில் மின்னிய வனப்பின் காந்தியும் அவரை ஏதோ ஒரு புது மயக்கத்தில் ஆழ்த்தியது.

''என்ன மாமா, அப்படிப் பார்க்கிறீர்கள்?'' என்றாள் நாணம் கலந்த குறும்புடன்.

திருமலாச்சாரியார் திடுக்கிட்டார். சமாளித்துக் கொண்டு சிரித்தவாறே, ''ஒன்றுமில்லை, வேதம் ! உன்னைப் பார்த்தால் இப்போது எவ்வளவு அழகாக இருக்கிறது. தெரியுமா ? உன் அழகு என்னையே..உம்.. உன்னை மணந்து கொள்ள எந்தப் பாக்கியவானுக்குக் கொடுத்து வைத்திருக்கிறதோ ! பிறகு என்னை மறந்துவிடுவாய் !'' என்று வேடிக்கையாகச் சொன்னார்.

''போங்க, மாமா ! உங்களை எப்படி மறக்க முடியும் ?'' என்றாள் வேதம். பிறகு, ''நான் போய் வருகிறேன், மாமா..உங்களை இன்றைக்கு எங்கள் வீட்டில் சாப்பிடக் கூப்பிடச் சொன்னார்கள்'' என்றாள்.

''பலே ! விருந்து பிரமாதம்னு சொல்லு.''

வேதம் துள்ளியோடிப் போனாள். அவள் போவதைப் பார்த்துக் கொண்டே இருந்தார் திருமலாச்சாரியார். அவளுடைய உருவம் மறைந்ததும் அவருடைய மனத்தில் திடீர் என்று ஒரு தீர்மானம் உண்டாயிற்று.

★

அன்று மத்தியானம் திருமலாச்சாரியார் ராமசுவாமியின் வீட்டில் விருந்துண்டார். அவர் வேதத்துக்குப் பிறந்த நாள் பரிசாக ஒரு பட்டுப் புடவை வாங்கித் தந்தார். மத்தியானம் சாப்பாடு எல்லாம் முடிந்த பிறகு இருவரும் வெளித் திண்ணையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

''என்ன ராமசுவாமி! ஏதாவது வரன் கிடைத்ததா? தேடிக் கொண்டுதானே இருக்கிறீர்கள்?'' என்று கேட்டார் திருமலாச்சாரி.

ராமசுவாமி நெடுமூச்செறிந்தார். ''உங்களுக்குத் தெரியாதது என்ன இருக்கிறது ? பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். அப்படிக் கிடைத்தாலும் கல்யாணம் செய்து கொடுக்கப் பணத்துக்கு நான் எங்கே போவது ?'' என்றார்.

''ஒன்றுக்கும் கவலைப்படாதீர்கள். வேதம் ரொம்பவும் அதிர்ஷ்டக்காரி....அவளுக்கு நல்ல இடமாகக் கிடைக்கும்'' என்றார் திருமலாச்சாரியார்.

சிறிது நேரம் மௌனம் நிலவியது.

''என்ன ராமசுவாமி, ஒரு விஷயம் சொல்கிறேன். ஒப்புக் கொள்வீர்களா ?'' என்றார் அவர் திடீரென்று. ''என்ன அப்படிக் கேட்கிறீர்கள்? தயங்காமல் சொல்லுங்கள் !'' என்றார் ராமசுவாமி.

''எனக்கு இருக்கும் சொத்து என்னுடைய இரண்டு சந்ததிகளுக்கும் காணும். 'அவள்' –மகாராஜி–எனக்கு முன் குங்குமத்துடன் போய்விட்டாள். நானோ ஏகாங்கி. எனக்குப் பின் அவை யெல்லாம் பாழாய்ப் போய்விடலாமா ? எனக்கு ஒரு வாரிசு வேண்டாமா?''

''ஆமாம், ஆமாம்! அவசியம் வேண்டியதுதான்....''

''ராமசுவாமி! என் இந்தத் தனிமை என்ற பயங்கரத்தைப் போக்க ஏதாவது வழி செய்து கொள்ளலாமா என்று சிறிது நாட்களாக யோசித்து வருகிறேன். நான் கலியாணம் செய்து கொள்ளப் போகிறேன், ராமசுவாமி !'' என்றார் அவர். அதைக் கூறியதும் திருமலாச்சாரியாருக்கே முகத்தில் சட்டென்று வியர்வைத் துளிகள் அரும்பின.

''அதற்கென்ன, தாராளமாய்ச் செய்து கொள்ளலாம். உங்களுக்கென்ன, ஐசுவரியத்தில் குறைவா ? அல்லது உடல் கட்டில்தான் குறைவா ?'' என்றார் ராமசுவாமி.

''ராமசுவாமி! வேதம் என்னுடன் சிறு வயதிலிருந்தே பழகி வருகிறாள். அவளிடம் எனக்குப் பிரிய முடியாத பாசம் உண்டாகி விட்டது. ஆகவே..ராமசுவாமி....உங்களுக்கு ஆட்சேபனை உண்டா, நான் வேதத்தை மணந்து கொள்ள....?'' என்று தழதழத்தவாறே கேட்டார்.

கையை
வெட்டிக் கொண்டு
விட்டேன்!

# உடனே—
# 'டெட்டாலை' எடு!

நோய் வரும் முன்பே
பாதுகாத்துக் கொள்ள—




## 'DETTOL'

# இலவசம்

'Modern Hygiene for Women' (ஸ்திரீகளுக்கு நவீன சுகாதாரம்) என்ற இலவசப் புத்தகத்தைப் பெற அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிட், இலாகா FB-3, தபால்பெட்டி நெ. 664 கல்கத்தா-1 விலாசத்திற்கு எழுதுங்கள்

D1-2 AEL 197

---

நீண்டு பெருகும் கூந்தல் வேண்டுமானல்

# கேசவர்த்தினி

தடவுங்கள்



தலை அரிப்பைப் போக்குங்கள். மயிர் கொட்டுவதை நிறுத்துங்கள். அகால நரையைத் தடுங்கள். நரையைத் தாமதிக்கச் செய்யுங்கள். பளபளப்பான கேசத்தைப் பெருக்கிக் கொள்ளுங்கள். மறைந்துள்ள கூந்தலழகை எடுத்துக் காட்டுங்கள் கேசவர்த்தினியின் உதவியால்.




**ஷாம்புவின் உதவியால்**

**தலையை சுத்தமாகவும் பரிமளமுள்ளதாகவும் ஆக்குங்கள்**

*கேசவர்த்தினி அணு 14. ஷாம்பு அணு 14. தபால் செலவு வேறு. எங்கும் கிடைக்கும்.*

கேசவர்த்தினி ப்ராடக்ட்ஸ், கோயமுத்தூர்

No. 2




ஷாலிமார்

பூசுவதற்குத் தயாரான
பெயிண்டு

இது ஒரு பூசுவதற்குத் தயா
ராக இருக்கும், நீடித்து உழை
க்கும்பளபளப்பான பெயிண்டு




ஷாலிமார்

அலுமினியம் பெயிண்டு
சித்தளவு பெயிண்டுச்செலவில்
அதிக இடத்திற்குப் பூசலாம்




ஷாலிமார்

சுவர்களுக்கேற்ற
பெயிண்டு

வீட்டின் உட்புற பிளாஸ்டர், கான்
கிரீட், மரச் சாமான்கள் மேல்
பூசலாம். நீடித்து உழைக்கும்.




வீடுகளிலும், தொழிற்சாலை
களிலும் பலவித வேலைகளுக்
கேற்றது. எவ்வித இடங்களுக்
கும் பூசலாம், பிரஷ்ஷினால் பூச
லாம், தோய்த்தும் பூசலாம்,
அல்லது ஸ்பிரே பண்ணலாம்,
பல தடவைகள் கழுவக்
கேற்றது.

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., PRIVATE LTD.**
**Post Box 136, MADRAS-1**

SPW 316

ராமசுவாமி அப்படியே திடுக்கிட்டு விட்டார். அவர் இப்படிப்பட்ட கோரிக்கையை வெளியிடுவார் என்று அவர் கனவிலும் எண்ணவில்லை. பிறகு "திருமலாச்சாரி! உங்களுக்கு உடனே பதில் சொல்ல இயலவில்லை என்றால், உங்களுக்கு நான் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறேன். இருந்தாலும், இது விஷயமாய் எல்லோரையும் கலந்தாலோசித்துத் தான் பதில் சொல்ல வேண்டும்" என்றார்.

"அப்படியே ஆகட்டும். ஒன்றும் அவசரமில்லை...." என்றார் திருமலாச்சாரியார். ராமசுவாமி பேசியதிலிருந்து தாம் வெற்றி பெற்றுவிடுவோம் என்று கண்டு கொண்டார்.

ராமசுவாமி தம் மனைவியைக் கேட்டார். அவளும் தீவிரமாக யோசித்தாள். 'நம் தரித்திர நிலையில் இதைவிட்டால் வேறு அதிர்ஷ்டம் எங்கே கிடைக்கப் போகிறது?' என்றுதான் அவளுக்கும் தோன்றியது. ஆனாலும் வேதத்தைக் கேட்டு அவள் விருப்பப்படி நடப்பது என்று அவர்கள் தீர்மானித்தனர்.

வேதம் திருமலாச்சாரியாரின் ஆசையை அறிந்ததும் அப்படியே அயர்ந்து விட்டாள்.

வேதம் அவரை மணந்துகொள்ளச் சிறிதும் ஒப்பவில்லை. "என்னை எந்தப் பாழுங்கிணற்றில் வேண்டுமானாலும் தள்ளுங்கள். ஆனால், உருயிடன் சித்திரவதை செய்ய மட்டும் வேண்டாம். அவர் நமக்கு எத்தனையோ உபகாரம் செய்திருக்கிறார். வேண்டுமானால், அவர் வீட்டுச் சமையற்காரியாகவும், வேலைக்காரியாகவும் உழைக்கத் தயாராக இருக்கிறேன். ஆனால்..அப்பா,..அம்மா..அவரைக் கணவராக மட்டும்.." அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை. கண்களில் நீர் பெருகிற்று.

அதற்கு மேல் அவர்கள் அவளை வற்புறுத்தவில்லை. வேதத்தின் மேல் அவர்களுக்குத் தனி அன்பு. அவள் கண் கலங்குவதை அவர்கள் ஒருகாலும் சகிக்கத் தயாராயில்லை.

வேதம் தன்னை மணக்க விருப்பப்படவில்லை என்று அறிந்ததும் திருமலாச்சாரியாருக்கு உள்ளம் உடைந்து விட்டது. வேதத்தை எப்படியாவது கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று ஏற்பட்ட ஆசையில், அவர் மிகவும் தாழ்ந்த காரியம் ஒன்றைச் செய்யத் தீர்மானித்து விட்டார்.

ராமசுவாமிக்கு, அவருடைய பெண்களின் கல்யாணத்தின் போது கொடுத்த கடனைத் திருப்பிக் கொடுக்கும்படி நெருக்குவது என்று அவர் தீர்மானித்தார்.

இந்த வெடிகுண்டைத் தூக்கிப் போட்டதும் ராமசுவாமி பேரிடி விழுந்தாற் போல் திகைத்து விட்டார். அவருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. சித்தம் கலங்கி நின்றார். எவ்வளவோ கெஞ்சினார். ஆனால் திருமலாச்சாரியார் மனம் இரங்கவில்லை.

கடைசியில் ராமசுவாமி பணிந்தார். வேதத்துக்கு ஆயிரக்கணக்கான சமாதானங்கள் சொல்லியதும், வேதமும் சம்மதித்தாள். எந்த நற்குணமுள்ள பெண்தான் பெற்றோர்களுடைய கஷ்ட நிலையில் தன்னைத் தியாகம் செய்ய மாட்டாள்?

விவாகத்துக்கு வேண்டிய காரியங்கள் துரிதமாக நடைபெற்று வந்தன.

ஆனால் திடீரென்று எதிர்பாராத விதமாக ஒரு சம்பவம் ஏற்பட்டது. அடுத்த தெருவிலிருக்கும் ரங்கநாதனின் மருமான் சௌம்யநாதன், பட்டணத்திலிருந்து வந்தவன், அன்று



வேதத்தை ஆற்றங்கரையில் கண்டவன் அவளுடைய அழகில் அப்படியே சொக்கிப் போய் விட்டான். மெதுவாகத் தன் மாமாவிடம் வேதத்தைப் பற்றிய முழு விவரங்களையும் அறிந்ததும் அவளிடம் முன்னிலும் பன்மடங்கு அனுதாபமும் அன்பும் அவனுக்கு உண்டாயிற்று. இத்தனை நாட்கள் அக் குடும்பத்தின் உறுதுணையாயிருந்த திருமலாச்சாரியார், இப்போது தம் பெண்ணாகப் பாவித்தவளைப் பலி கொள்ள மிருகமாய் மாறிவிட்டது கண்டு கொதித்தான். அவருக்கு ராமசுவாமி கொடுக்க வேண்டிய கடனைத் தானே அடைத்து எவ்விதச் செலவுமின்றி வேதத்தைத் தானே மணந்து கொள்ள முன் வந்தான். தன் மாமா ரங்கநாதனிடம் கூறி எல்லா ஏற்பாடுகளும் செய்யச் சொன்னான்.

★

மணப் பந்தலில் வேதம் மனத்தில் மகிழ்ச்சி பொங்க, தன் வாழ்க்கைப் படகைத் துடுப்பு கொண்டு செலுத்த முன் வந்திருக்கும் நாயகனுடன் அமர்ந்து கொண்டிருந்தாள்.

சௌம்யநாதனும் அவளைப் பார்த்து அடிக்கடி புன்சிரிப்பு சிரித்தவாறே புரோகிதர் சொன்ன மந்திரங்களை யெல்லாம் கூறிக் கொண்டே வந்தான்.

இருவரும் எழுந்து நமஸ்காரம் செய்ய வேண்டிய சமயம் வந்தது. திடீரென்று அப்போது ஏற்பட்ட சம்பவம்...

'ஐயோ, இது என்ன....?' வேதம் அதைக் கண்டு 'வீல்' என்று கூச்சலிட்டாள். எல்லோரும் ஓடி வந்து சௌம்யநாதனைச் சூழ்ந்து கொண்டார்கள். சௌம்யநாதனுடைய கைகளும், கால்களும் நடுங்கின. வாய் கோணிக் கொண்டது. வாயில் நுரை தள்ளியது. உடல் இழுத்துக் கொண்டு போயிற்று. ஆமாம், அவனுக்குக் காக்கை வலிப்பு வந்துவிட்டது. அவனுடைய கையில் சாவிக் கொத்தைக் கொடுத்து, முகத்தில் நீரைத் தெளித்து மெதுவாக அவனுக்கு உணர்வைக் கொண்டு வந்தார்கள்.

இதையெல்லாம் கண்டதும் ராமசுவாமி ரங்கநாதனைக் கூப்பிட்டு அவரிடம் பெரும் சண்டை போட்டார். "பிள்ளையிடம் உள்ள இந்தக் குறையை மறைக்கத்தானா மூவாயிரம் ரூபாய்க் கடனை வலிய வந்து அடைத்து, எந்தவிதமான சீரும் இன்றிப் பெண்ணை மணம் செய்து கொள்ள முன் வந்தது? இந்த சம்பந்தம் வேண்டாம். என் பெண் கன்னியாகவே இருக்கட்டும்...." என்று ஆவேசமாய்ப் பொழிந்தார்.

ரங்கநாதன் எவ்வளவோ சமாதானங்கள் கூறினார். "ராமசுவாமி, உங்களிடம் முன்பே அதைப் பற்றிச் சொல்லவில்லை என்பது வாஸ்தவம்தான். அவனுக்கு இந்தக் காக்கை வலிப்பு இரண்டு வருடங்களுக்கு முன் இருந்தது உண்மை. அப்போதெல்லாம் எப்போதோ ஒரு தடவை வரும். டாக்டரிடம் காண்பித்து நூற்றுக் கணக்கில் பணம் செலவழித்துச் சிகிச்சை செய்யவே இரண்டு வருடங்களாக அது வருவது நின்றே போய் விட்டது. அதனால் அது நிரந்தரமாகக் குணமாகிவிட்டது என்று தீர்மானித்து அதைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லை. இன்று அவனுக்கு மறுபடியும் வலிப்பு வந்தது. மறுபடியும் டாக்டரிடம் காண்பித்து வேண்டிய சிகிச்சைகள் செய்கிறோம். அதற்காகத் தாங்கள் கவலைப்பட வேண்டாம்" என்றார்.

அப்போதும் ராமசுவாமிக்குச் சமாதானப் படவில்லை. எல்லோரும் அவருக்கு எவ்வளவோ எடுத்துக் கூறினார்கள். அவர் கல்யாணத்தை நிறுத்தி விடுவதில் ஒரே முக்கியமாய் இருந்தார். அப்பொழுது, கல்யாணத்துக்கு வந்திருந்தவர்கள் அத்தனை பேர்களும் ஆச்சரியப்படும்படி வேதம் தகப்பனாரிடம் வந்து, "அப்பா! கல்யாணத்தை நிறுத்த வேண்டாம். நான் இவரையே கல்யாணம் செய்து கொள்வதென்று முடிவு செய்து விட்டேன். கடன் தொந்தரவிலிருந்து நம்மைக் காப்பாற்றிய இவருக்கு நம் குடும்பம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறது. கடமையிலிருந்து தவற நான் விரும்பவில்லை. மேலும் இனி என்னை யார் மணந்து கொள்வார்கள்?" என்று உணர்ச்சி ததும்பக் கேட்டாள்.

அவள் கூற்றில் தொனித்த உறுதியையும், உண்மையையும் கண்ட ராமசுவாமி வெளியே வந்து, "சௌம்யநாதா! மணையில் உட்காரு அப்பா!" என்றார். அப்புறம் கல்யாணம் வெகு விமரிசையாக நடந்தேறியது.

சௌம்யநாதன் வேதத்தைப் பார்த்துக் கேட்டான்:

"வேதம், நீ என்னை எப்படி விவாகம் செய்து கொள்ளச் சம்மதித்தாய்? பொய் சொல்லி ஏமாற்றி விட்டேன் என்று என் மேல் கோபம் வரவில்லையா?"

"உங்களைப் பார்த்ததும் என் கலி தீர்க்க வந்தவராகக் கண்டு கொண்டேன். அதனால், உங்களைத் தவிர வேறு யாரையும் மணக்க நான் விரும்பவில்லை. உங்களுக்கு வலிப்பு கண்டதும் உங்கள் பேரில் அனுதாபமே உண்டாயிற்று. முன்னைவிட ஆசையும், ஆதரவும் பெருகி விட்டது."

"வேதம்! உண்மையில் நீதான் என் கலி தீர்க்க வந்த தெய்வம். என்ன அன்பு உனக்கு. ஆனால் வேதம்....என் இந்த வியாதி எந்தச் சமயத்திலும் என் உயிருக்கே ஹானியை விளைவிக்கக் கூடியது. அந்தத் திருமலாச்சாரியாரை மணந்திருந்தால் அவர் உடல் இருக்கும் நிலைக்கு இன்னும் முப்பது வருடங்களாவது இருப்பார். உன் வாழ்க்கை எவ்வளவோ இன்பமாக இருக்கும். ஆனால் என்னால் உனக்கு எப்போது ஆபத்து உண்டாகுமோ!" என்றான் அவன்.

"அதற்கு நான் தயாராய்த்தானே உங்களை மணந்தேன்! உங்களுடன் ஒரு நாள் வாழ்ந்து உடனே விதவைப் பட்டம் பெற்றாலும் அதைப்பற்றிக் கவலைப்படமாட்டேன். அந்த ஒரு நாள் வாழ்வே என் வாழ்நாள் முழுதும் ஞாபகத்தில் இருந்து இன்பமளித்துக்கொண்டிருக்கும். ஆனால் அந்தத் திருமலாச்சாரியார் நூற்றாண்டு வாழ்ந்து என்னைச் சுமங்கலிப் பட்டத்தைத் தாங்கிக் கொண்டிருக்கச் செய்தாலும் இந்த ஒரு நாள் வாழ்வுக்கு அது ஈடாகுமா?" என்றாள் வேதம்.

கடைசியில் அவள் கூறியபடியே இப்போது நடந்து விட்டதே!

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

PEARS
TRANSPARENT
SOAP

## எவ்வளவு நிர்மலமானது பாருங்கள்

வெளிச்சத்துக்கு எதிரே பிடித்தால் பியர்ஸ் சோப்புக் கட்டியின் மூலமாக நீங்கள் ஊடுருவிப் பார்க்க முடியும்! பியர்ஸ் நிர்மலம் என்றால் அது தான்! க்ளிஸரின் கலந்த பியர்ஸ் சோப் பச்சிளங் குழந்தையின் மென்மையான சருமத்துக்கும் பூரணமான பாதுகாப்புத் தருகிறது.

## எவ்வளவு நல்லதென்று உணருங்கள்

பியர்ஸ், சருமத்துக்குப் புது மெருகும் போஷாக்கும் அளித்துப் பல்லாண்டுகள் மிருதுவாகவும் எழிலோடும் வைத்திருக்கிறது. அந்தக் காரணத்துக்காகவே, உலகெங்கும் உள்ள அழகிகள் பியர்ஸ் சோப்பைப் பிரதிதினமும் உபயோகித்து தமது மேனியின் நவ யௌவனக் களையைப் பாதுகாத்து வருகிறார்கள்.

பியர்ஸ் சோப்பை வழக்கமாக உபயோகப்படுத்தத் தொடங்குங்கள். அது எவ்வளவு நல்லதென நீங்களும் உணர்ந்து கொள்வீர்கள்

PEARS
TRANSPARENT
SOAP

# பியர்ஸ் சோப்

**அசல் க்ளிஸரின் கலந்த அழகு தரும் சோப்**

[illegible] ஏ & எப். பியர்ஸ் லிமிடெட்டுக்காக இந்தியாவில் தயாரித்தது — TG. 84-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# சாவித்திரி

எப்பொழுதும் உபயோகிப்பது

## லக்ஸ் டாய்லெட் சோப்

**"தூய்மையான சோப்புக்கு மாத்திரமே அத்தகைய வெண்மை உண்டு" என்கிறார் அவர்**

முற்றிலும் பரிசுத்தமானது! லக்ஸ் டாய்லெட் சோப்பின் பாலொத்த வெண்மை அதன் அகத் தூய்மைக்கு அடையாளம்! தூய, வெண்ணிறமுள்ள இந்த சோப்பை நீங்களே உபயோகித்துப் பாருங்கள். மிருதுவான, சுகமணம் கமழும் அதன் நுரை எவ்விதம் உங்கள் சருமத்தைப் பராமரிக்கிறது... எத்தகைய எழில் ஊட்டுகிறது என்பதை அதி விரைவில் நீங்களே கண்டு கொள்வீர்கள். பூரண உடல் வனப்புக்கு, சிக்கனம் வாய்ந்த பெரிய சைஸ் வில்லைகளை உபயோகியுங்கள்.




சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 488-50 TM.